

# அருவியூர் நகரத்தார் குரல்



திங்கள் இரண்டுக்கு ஒன்று

மே-2019 கல்வி பண்பாடு வளர்ச்சி இதழ்

ஸ்ரீ விகாரி சித்திரை




## முதலாம் ஆண்டு நினைவஞ்சலி

தெய்வத்திருமதி

## A. ரஞ்சிதம் ஆச்சி

தோற்றம்
19.08.1955

மறைவு
23.04.2018

கருவறையில் உருவாக்கி வளர்த்து ஆளாக்கிவிட்டு
கண் மறைந்த எந்தன் தாயே! எந்தன் தந்தையை
தவிக்கவிட்டு எங்களது இதயக் கதவுகளை விட்டு
வானுலகம் சென்ற எங்கள் இதய தெய்வத்திற்கு

**சமர்ப்பணம்**

என்றும் உங்கள் நினைவில் வாழும்...

மகன்: **முத்துப்பழனி (எ) மகேந்திரன்**

மருமகள்: **மு. ராஜலெட்சுமி** B.B.A., PGDCA.,

மணி பெட்டிக்கடை, பஸ்ட்பீட், காரைக்குடி


வெளியீடு

அருவியூர் வடக்குவளவு நகரத்தார்

**கல்வி வளர்ச்சிக் கழகம்** (பதிவு)

பிரான்மலை

# கவி.கொ.கணேசனின் "கவிதை பூக்கள்" என்ற கவிதைத் தொகுப்பு நூல் வெளியீடு நிகழ்வுகள் 17.03.2019, சென்னை.



கலைமாமணியுடன் கவி.கொ.கணேசன்



கலைமாமணிமற்றும் முனைவர்களுடன் கவி.கொ.கணேசன்



கல்வி வளர்ச்சி கழகத்தலைவர்
கவி.கொ.-வை கௌரவித்த அந்த ஒரு நிமிடம்



கலைமாமணியுடன் கல்வி வளர்ச்சி கழகத்தலைவர்
கவி.கொ.கணேசன்



கலைமாமணி, கழக நிர்வாகிகளுடன்
கவி.கொ.கணேசன்



கவி.கொ.-வை கௌரவித்த சென்னை நிர்வாகிகள்



கவி.கொ.கணேசனுடன் மருமகன் ஜெயபிரபு



அன்னைக்கு பின் அன்பால் உயர்ந்த அக்காவுடன் கவி.கொ.

மதுரை திரு. M.M. தியாகராஜன் செட்டியார் அவர்களின்

# 75 வயது நிறைவு விழா நிகழ்வுகள்








## மதுரை திரு. M.M. தியாகராஜன் செட்டியார் அவர்களின்

# 75 வயது நிறைவு விழா நிகழ்வுகள்



















# பதிப்பாசிரியர் குறிப்பு

2019-ஆம் ஆண்டின் - மூன்றாவது குரல் நல்வாழ்வு சிறப்பிதழ் - III ஆக வெளிவருகிறது.

கல்வி வளர்ச்சிக் கழகத்தின் நன்கொடையாளர்கள் - பெரும் புரவலர்கள், வள்ளல், கொடைவள்ளல், பெருங்கொடை வள்ளல், மாபெருங்கொடை வள்ளல், கல்விக் காவலர்கள், 6-12 உதவித்தொகை வழங்கும் பெருமக்கள், போட்டோக்களை மல்டி கலரில் நடுப்பகுதியில் வெளியிட்டு அவர்களை கௌரவித்துப் பாராட்டுகிறோம்.

சிங்கம்புணரி இடம் மீட்டெடுப்பு நிகழ்வு, கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகக் குழு நிகழ்வுகள், அரசு பள்ளிகளுக்கு புரவலர் நன்கொடை, கல்விக் காவலர் ஆவது எளிது! இப்படி நமது சமூகச் செய்திகள் பல.

குலத்தளவே ஆகுமாம் குணம், நல்லாரோடு இணங்க இருப்பதுவும் நன்று. கல்லாதவன் கற்ற கல்வி விதியின் பயனே பயன் என வாழ்க்கையில் அனுபவித்துணர வேண்டியவை பல இடம் பெற்றுள்ளன. நல்வாழ்விற்கு உதவும் ஔவையார் இயற்றிய மூதுரை முப்பது பாடல்களும், தெளிவுரையுடன் இடம் பெற்றுள்ளது. எனவே படித்துணர வேண்டியது வாசகர்கள் பொறுப்பு.

நல்வாழ்வுக் கட்டுரைகள்! பல கருத்துக்கள்... நாபியில் (தொப்புளில்) எண்ணெய் தேய்ப்பது, வள்ளலாரின் காயகல்ப மூலிகை, உடல் கழிவுகளை அகற்றிட..., பார்வைக் குறைபாடு நீங்கிட, உடல் எடையைக் குறைக்க, இதயப் பாதுகாப்பு, மின்சாரத் தைலம், என 13 பக்கங்கள் பயனுள்ள எளிய மருத்துவக் குறிப்புகள்.

நல்வாழ்வு குறிப்புகளைப் படித்து அவற்றினை இன்னும் ஒரு படி சீராக்கி கொடுத்த நம்மவர் திரு S. தியாகராஜன் BNYS., திருச்சி அவர்களுக்கு எமது நன்றியைத் தெரிவித்துப் பாராட்டுகிறோம்.

ஒவ்வொரு குரலையும் ஒரு படி உயர்த்தி, அடுத்த நிலைக்கு, எடுத்துச் செல்வதில் ஆசிரியர் குழு அக்கறை செலுத்தி வருகிறது. - அன்புடன் **சுப. துரைராசு, பதிப்பாசிரியர்.**

★★★★★

உ

நமது சமூகத்தின் கல்வி வளர்ச்சியே எமது தலையாய குறிக்கோள்

உதவுவோம்! பண்படுத்துவோம்! பாராட்டுவோம்!

**பட்டம் பெற்றுத் தொழிலிற் சிறப்போம்!**



# அருவியூர் நகரத்தார் குரல்



அலைபேசி : 63 74 45 96 70

**ஆண்டு 23**
**வெளியீடு 141**

அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல. - திருக்குறள்

**மே**
**2019**





கடிதம், செய்திகள், படைப்புகள் இவற்றை
அனுப்ப வேண்டிய முகவரி :
அருவியூர் நகரத்தார் குரல்,
அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்,
3, முதல் குறுக்குத் தெரு
அழகப்பா காம்ப்ளெக்ஸ் பின்புறம்,
பொன்னமராவதி, புதுக்கோட்டை - 622 407.
avnkalvi@gmail.com
dorairajsp@gmail.com
suryaprint1998@gmail com


நகரத்தார் குரல் வாசகர்கள் அனைவருக்கும்

## ஸ்ரீவிகாரி தமிழ் புத்தாண்டு வாழ்த்துக்கள்!

சித்திரை மகளே வருக! மகிழ்ச்சி உள்ளம் பெருக!
உன் வருகையில் உள்ளம் உருக!
உன்னால் நம் துன்பமெல்லாம் சிறுக!
அனைத்து இன்பங்களும் பெருக அருள்புரிவாய்!!

இனிய ஸ்ரீ விகாரி புத்தாண்டு வாழ்த்துக்கள்!

**இப்படிக்கு**

**தலைவர் மற்றும் நிர்வாகக்குழு உறுப்பினர்கள், கல்வி வளர்ச்சிக் கழகம்**

தலைவர் பக்கம்






**செ. ஆசை அலங்காரம்** B.Sc.,
தலைவர்

அன்பில் சிறந்த நகரத்தார்ப் பெருமக்களே!

வணக்கம்!

தானத்தில், தர்மத்தில்; அன்றும், இன்றும்; உயர்ந்தும் சிறந்தும் விளங்கும், நம் சமுதாய மக்களின் செயல்பாடுகள், வரலாற்றில் என்றும் நிலைத்து நிற்க வேண்டும்! என்கிற நோக்கத்தின் அடிப்படையில், கீழ்க்கண்ட விசயங்கள் குறித்த விவரங்களைச் சேகரிக்கவுள்ளோம். அவைகள் தொடர்பாக தாங்கள் அறிந்த, தெரிந்த விவரங்களையும், ஆதாரங்கள் இருப்பின் அவைகளையும் எங்களுக்கு அனுப்பி வைக்குமாறு வேண்டுகிறேன்!

பல ஊர்களில் நம்மவர்கள் தனியாகவும் பங்களிப்புடனும் ஆலயங்கள் அமைத்துள்ளார்கள். பல ஊர்களில், பொதுநலம் கருதி குளங்கள் வெட்டியுள்ளார்கள். பல்வேறு இடங்களில் கண்மாய்கள் வெட்டப்பட்டுள்ளன. இவைகளை அமைக்க தங்கள் சொந்த நிலங்களைத் தானமாக, நம் நகரத்தார்கள் வழங்கியுள்ளார்கள். சில இடங்களில் மக்கள் குடியிருப்புக்காக தங்களுக்குச் சொந்தமான பட்டா நிலங்களைத் தானமாக வழங்கியுள்ளார்கள். பல இடங்களில் மக்களின் குடிநீர் தேவைக்காக கிணறுகள் வெட்டி கட்டிக் கொடுத்துள்ளார்கள்.

பலர் ஏழைக் குழந்தைகளைத் தத்தெடுத்து படிக்க வைத்துள்ளார்கள். பலர் ஏழைக் குழந்தைகளின் படிப்பிற்கு உதவி செய்துவருகிறார்கள். பல ஊர்களில் நம்மவர்கள் பள்ளிக்கு இடம், பொருள் அளித்தும், கல்விச் சாலைகளில் புரவலராகவும், பள்ளி வளர்ச்சிக் கழகம், பள்ளிப் பெற்றோர் ஆசிரியர் சங்கம், முன்னாள் மாணவர் சங்கம் போன்ற பல அமைப்புகளில், நிர்வாகிகளாக இருந்து திறம்பட செயலாற்றிக் கல்வித் தொண்டு புரிந்து வருகிறார்கள்.

இன்னும் சில இடங்களில் அன்னதானக் கூடம் அமைத்தும், தனிப்பட்ட முறையில் தங்கள் இல்லங்களிலே உணவளித்தும், பசிப்பிணியைப் போக்கிட உதவி வருகிறார்கள்.

இவைகளை எல்லாம் தொகுத்து நம்மவர்கள் அனைவரும் அறியும் வண்ணம் நமது நகரத்தார் குரலில் வெளியிட அனைவரின் ஒப்புதலும், ஆதரவும் தேவைப்படுகிறது. அது சமூக சேவையில் நம்மவர்களின் பங்களிப்பை பறைசாற்றும் ஒரு வரலாற்றுப் பெட்டகமாக அமையும் என்று நம்புகிறோம். இது தொடர்பாக தங்களின் கருத்துக்களை தெரிவிக்குமாறு அன்போடு கேட்டுக் கொள்கிறேன்.

நம் நகரத்துப் பிள்ளைகள் மட்டும் பயன்பெற்றால் போதாது. சாதி, மத பேதமின்றி அனைவருக்கும் கல்வி கிடைக்க வேண்டும். அதற்கு நம்மால் முடிந்த அளவில் உதவுவது சிறப்பாக இருக்கும் என 10.02.2019 அன்று நடைபெற்ற நிர்வாகக்குழுவில் பரிசீலிக்கப்பட்டு பிற சாதியை, மதத்தைச் சார்ந்த மாணவ, மாணவியர்களுக்கு நபர் ஒருவருக்கு ரூ.1000/- வீதம் பத்து பேருக்கு ரூ.10,000/- ஆண்டுதோறும் வழங்குவது என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது. இவர்கள் குலுக்கள் முறையில் தேர்வு செய்யப்படுவார்கள். வரும் 2019-20 கல்வி ஆண்டிலிருந்து இத்திட்டம் செயல்படுத்தப்படும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும். சமூக சேவையில் கல்வி வளர்ச்சிக் கழகத்தின் இந்த தொடக்கம் தொடரவும், வளரவும் நம் நகரத்தார்களின் ஆதரவையும், ஆசியையும் வேண்டுகிறேன்.

*****

## 38-ஆம் ஆண்டு விழா அழைப்பிதழ்

நமது கல்வி வளர்ச்சிக் கழகத்தின் 38-ஆம் ஆண்டு விழா மற்றும் பாராட்டு பரிசளிப்பு விழா, பிரான்மலை மங்கைநாயகர் மன்றத்தில் 19.05.2019 ஞாயிற்றுக்கிழமை காலை 11.30 மணிக்கு தொடங்கி நடைபெற உள்ளது. நகரத்தார் பெருமக்கள் அனைவரும் கலந்து கொண்டு சிறப்பிக்க வேண்டுகிறேன்.

**- சுப. செல்வம், செயலாளர்**

*****

# நிர்வாகக் குழு நிகழ்வுகள் 31-03-2019

கல்வி வளர்ச்சிக் கழகத்தின் 4-வது நிர்வாகக் குழு கூட்டம் 31-03-2019 ஞாயிற்றுக்கிழமை காலை 11-00 மணியளவில் கல்வி வளர்ச்சிக் கழக புதிய அலுவலகத்தில் நடைபெற்றது.

நிர்வாகக் குழுவில் கீழ்க் கண்ட பொருள்கள் விவாதிக்கப் பெற்று தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1. கொட்டாம்பட்டி பேருந்து நிலையத்திற்கு எதிரில் உள்ள கல்வி வளர்ச்சிக் கழகத்திற்குச் சொந்தமான வணிக வளாக கட்டடம் கட்டி சுமார் 20 ஆண்டுகள் ஆகிவிட்டதால் ஆங்காங்கே ஏற்பட்டுள்ள சிறு சிறு பழுதுகளை நீக்கி, சிறிய அளவில் மராமத்து பணிகளை செய்யலாம் என்று எண்ணி இடத்தை பார்வையிட்டோம். தற்போது தரை தளத்தில் 5 கடைகள் இருப்பது போன்று முதல் மாடியில் 5 கடைகள் கட்டவும், இக்கட்டடத்திற்கு பின்புறம் உள்ள காலியிடத்தைச் சுற்றி சுற்றுச் சுவர் எழுப்பவும், காலியான இடத்தில் ஷெட் ஒன்று அமைத்து அதையும் வாடகைக்கு விட நல்ல வாய்ப்பு உள்ளது.

இதனை நிர்வாகக் குழுவில் விவாதித்து சுமார் 15 இலட்சம் செலவில் மேற்கண்ட வேலைகளை, நம்மவர் சிறுகுடியைச் சேர்ந்த Er. மலை அலங்காரம் அவர்களிடம் ஒப்பந்தம் செய்து கொள்வது என்றும், மேற்படி வேலைகளை சுமார் 4-5 மாதங்களில் முடிப்பது என்றும், திட்ட மதிப்பீட்டின்படி செயல்படுத்துவது எனவும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

2. ஆண்டுதோறும் பத்தாவது மற்றும் +2 வகுப்பில் முதல் மூன்று இடங்களைப் பெறும் நமது மாணவ மாணவியருக்கு Sponsors மூலம் தங்கப் பதக்கம் அளித்து வருகின்றோம். இந்த வருடம் சில Sponsors விலகிக் கொண்ட நிலையில் புதிய Sponsors முன்வரும்வரை மேற்படி திட்டத்தை கல்வி வளர்ச்சிக் கழகமே செயல்படுத்துவது என்று தீர்மானிக்கப்பட்டது.

இவ்வாண்டு கல்வி வளர்ச்சிக் கழத்தின் பாராட்டு மற்றும் பரிசளிப்பு விழாவினை 19.05.2019 ஞாயிற்றுக்கிழமை அன்று சிறப்பாக நடத்துவது என்றும் அதன் முக்கிய அம்சங்கள் குறித்தும் கலந்து பேசப்பட்டது.

செயலாளர் நன்றி உரையுடன் கூட்டம் நிறைவு பெற்றது.

**- சுப. செல்வம் செயலாளர்**

★★★★★

## அருவியூர் வடக்குவளவு நகரத்தார் பொதுநலச் சங்கம் பிரான்மலை

இப்பவும் நமது சங்கத்திற்குப் பாத்தியப்பட்ட சிங்கம்புணரி மில் இடம் சம்பந்தப்பட்ட வழக்கு 27.03.2019 அன்று நீதிமன்றம் மூலம் முடிவுக்கு வந்துவிட்டது.

அந்த இடத்தை, நமது பொதுநலச் சங்கம் 27.03.19 அன்று கையகப்படுத்தி உள்ளது என்பதை அனைவருக்கும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்படிக்கு

தலைவர் : M. மாணிக்கம், செயலாளர் : S. இராமனாதன், பொருளாளர் : மங்கைபாகன், அறங்காவலர் : N. மாணிக்கம்
சென்னை நீதிமன்ற வழக்கறிஞர் : கா. இராமதுரை

## பாராட்டு

ஐம்பது ஆண்டு காலமாக ஆக்கிரமிப்பில் இருந்த சிங்கம்புணரியில் உள்ள இடத்தை மீட்டு, நமது அருவியூர் வடக்குவளவு நகரத்தார்க்கு சொந்தமாக்கிய, வழக்கறிஞர் திரு கா. ராமதுரை B.A.B.L. அவர்களுக்கும் மற்றும் அனைவரையும் எங்கள் சங்கத்தின் சார்பாகவும், எனது சார்பாகவும் பாராட்டி வாழ்த்துகிறேன்.

– P. **சிவன்ஜோதி**

*****

## புதிய பெரும் புரவலர்கள் – புதுக்கோட்டை

08-03-19 அன்று காலை நானும் செயலாளர் திரு. சுப. செல்வம் அவர்களும் புதுக்கோட்டை சென்றோம். அங்கு புதுகை செய்தி தொடர்பாளர் திரு. சதாசிவம், A. பாரதி அவர்களுடன் சேர்ந்து, கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு நிதி ஆதாரத்தைப் பெருக்கும் பொருட்டு நமது நகரத்தார் பெருமக்களை நேரில் சந்தித்தோம்.

இந்தச் சந்திப்பின் பயனாக, அருவியூர் வடக்குவளவு நகரத்தார் கல்வி வளர்ச்சிக் கழகத்தின் பெரும்புரவலர்களாக

1. திரு. A. குமரகுருபரன், காவியா மருந்தகம் – ரூ. 5000/-
2. திரு. A. பாரதி, புதுகை மருந்தகம் – ரூ. 5000/-

சேர்ந்துள்ளார்கள். புதியதாகச் சேர்ந்துள்ள பெரும் புரவலர்களைக் கல்வி வளர்ச்சிக் கழகம் நன்றியுடன் பாராட்டி வரவேற்கிறது!

**– செ. ஆசை அலங்காரம், தலைவர்.**

*****

கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகளின் அன்பு வேண்டுகோள்!

## எளிது! எளிது!! கல்விக் காவலர் ஆவது எளிது!

நமது கல்வி வளர்ச்சிக் கழகம் கல்விக் காவலர் நன்கொடைத் திட்டத்தை 2004-இல் தொடங்கியது. கடந்த 15 ஆண்டுகளில், இன்றுவரை 31 கல்விக் காவலர்கள் சேர்ந்துள்ளனர். நமது சமூகத்தினரின் இன்றைய பொருளாதார நிலையை எண்ணும் போது இன்னும் 100 பேர் கல்விக் காவலர் ஆகியிருக்க வேண்டும். அதற்குத் தாராள கொடை மனப்பான்மை வேண்டும்! இதுபற்றி ஒரு சிறு கட்டுரை.

**- பதிப்பாசிரியர்**

கல்விக் காவலர் ஆவது என்பது மிகவும் சுலபமான செயல். இதில் கஷ்டமோ, நம்மால் முடியுமா என்று நினைப்பதற்கோ இடம் இல்லை,

கல்வி வளர்ச்சிக் கழகத்தை நம் குடும்பத்தின் ஒரு உறுப்பினராக ஆக்கிக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு குடும்பத்தினரும் அப்படி முதலில் நினைக்க வேண்டும்.

கல்வி வளர்ச்சி கழகத்தை நம் தாயாக, தந்தையாக, அண்ணனாக, நம் வீட்டு ஆண் மகனாக, பெண் பிள்ளையாக நினைத்துப் பார்க்க எல்லோராலும் முடியும்! படித்து முடித்து வேலைக்குச் செல்பவர்கள், கல்வி வளர்ச்சி கழகத்தைத் தன் உற்ற நண்பனாக எண்ண வேண்டும்! திருமணம் ஆகி குழந்தைப் பேறு பெற இருக்கும் தம்பதியினர் கல்வி வளர்ச்சிக் கழகத்தை தன் குழந்தை என்று எண்ண வேண்டும். மேற்படி எண்ணம் மனதில் வளர்ந்தால், நிச்சயம் கல்விக் காவலர் ஆகுவது நம் அனைவருக்கும் சாத்தியமே! மிக எளிதே!

ஒரு குடும்பத்தில் ஒரு குடும்ப உறுப்பினருக்கு ஆகும் செலவு பிறப்பு முதல் திருமணம் ஆகும் வரை, முதுமை முதல் இறப்புவரை ஆகின்ற செலவு எவ்வளவு என்று, சின்னக் கணக்குப் போட்டுப் பார்த்தேன். இலட்சம் பல ஆகிறது. ஆனால் கல்வி வளர்ச்சிக்கழகம் என்ற நம் குடும்ப உறுப்பினருக்கு நாம் செய்யும் செலவு வாழ்நாளில் ஒரு இலட்சம் மட்டுமே! !

வேலைக்குப் போகும் நம்மவர்கள் கல்வி வளர்ச்சிக் கழகத்தை நண்பனாகக் கருதினால் நண்பனுக்கு எவ்வளவு செலவு, மற்றும் பண உதவிகள் செய்கின்றோம். இதை எல்லாம் ஒரு சிறிய அளவில் கணக்குப் போட்டுப் பார்த்தால் பல ஆயிரம் வரும் அல்லவா? கல்விக் காவலர் ஆவதற்கு வாழ்நாள் முழுமைக்கும் ஒரு நூறு ஆயிரம் மட்டும் செலவு செய்தால் போதுமே! அதுவும் நம்மால் முடியுமே!!

திருமணமாகி, குழந்தைப்பேறு பெற உள்ள, தம்பதியினர் கல்வி வளர்ச்சிக் கழகத்தைத் தங்களுடைய குழந்தை என்று எண்ணிப் பார்த்தால், பல நூறு ஆயிரத்தைக் கல்வி வளர்ச்சிக் கழகத்திற்குக் கொடுக்க முடியும்! பல குழந்தைகளுக்கு உதவி அவர்கள் பெற்ற பலனை சந்தோஷத்தைப் பெற முடியும்! அனுபவித்து பாருங்கள்! உங்களுக்குள் உணர்வீர்கள். முயற்சி செய்து பாருங்கள்! வெற்றி நிச்சயம்!

பெற்றால் தான் பிள்ளையா? கல்வி வளர்ச்சிக் கழகத்தில் உதவி கேட்டுக் காத்து இருக்கும் குழந்தைகள் அனைவரையும் தங்கள் குழந்தை என்ற எண்ணத்தை வளர்த்துக் கொள்ளுங்கள்! வாழ்வு மலரும். வாழ்க்கைக்கு அர்த்தம் புரியும்!

நாம் அனைவரும் கல்வி வளர்ச்சிக் கழகத்தினை இன்று முதல் நம் குடும்ப உறுப்பினராக நினைத்து மகிழ்ச்சி அடையத் தொடங்குவோம்! அந்த மகிழ்ச்சியில் கல்விக்காவலர் ஆக வேண்டும் என்ற சிந்தனைக் குழந்தை பிறக்கும்.

எளிது எளிது கல்விக்காவலர் ஆவது எளிது!

இனிது இனிது கல்விக்காவலர் ஆவது இனிது!!

பெரிது பெரிது கல்விக்காவலர் ஆவது பெரிது !!!

கொடுப்பதற்கு நீங்கள் கோடீஸ்வரனாக, பணக்காரனாக இருக்க வேண்டுமென்றோ அல்லது கோடீஸ்வரன் ஆகும் வரை காத்திருக்க வேண்டும் என்பதோ கிடையாது.

உதவ வேண்டும் என்ற நல்ல எண்ணத்திற்கு காலம், நேரம், அல்லது ஏழை, பணக்காரன் என்ற பாகுபாடு கிடையாது. கொடுப்பதிலும் ஒரு சுகம்; ஒரு இன்பம்; ஒரு சந்தோஷம்! பெறுபவரின் முக மலர்ச்சி! இறைவனின் தரிசனம்!

கடவுளைத் தேடி பொருள் செலவு செய்து எங்கும் அலைய வேண்டாம். நாம் கல்வி வளர்ச்சிக் கழகத்தில் கல்விக் காவலர் ஆவதன் மூலம் இறைவன் தரிசனத்தை இப்பிறவியில் வாழும் போதே இருந்த இடத்திலேயே கண்டு உணர்ந்து மகிழலாம்!

மகிழ்ச்சியில் பெரிய மகிழ்ச்சி பிறரை மகிழ்விப்பது தான்! மகிழ்வித்து மகிழ். கொடுப்பதை கொடுத்துக் கொண்டு இருந்தால் வருவது எந்த தடையும் இன்றி அதிகமாகத்தான் வேகமாக வந்து ஆக வேண்டும். இறைக்கின்ற கிணறு என்றும் வற்றுவதில்லை. மறுநாள் புது பொலிவுடன், புதுச் சுவையுடன் மேலும் அதிகமாக ஊற்றெடுக்கும்.

மனக் கதவை மெல்லத் திறங்கள்!

பலரின் வாழ்வுக்கு ஒளி ஊட்டுங்கள்!!

மனம் உண்டானால் மார்க்கம் உண்டு!!!

எண்ணங்களே செயல் வடிவம் பெறுகிறது!

இப்பொழுது சொல்லுங்கள் கல்வி வளர்ச்சிக் கழகத்தில் கல்விக் காவலராவது கஷ்டமா? சுலபமா?

அனைவரும் கல்வி வளர்ச்சிக் கழகத்தில் கல்விக் காவலராகி, நமது சமூக மாணவச் செல்வங்கள் நன்றாகக் கல்வி கற்று வாழ்வில் உயர்வடையத் தாங்களும் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து பிறரையும் மகிழ்வுடன் வாழ வைக்க வேண்டுகின்றோம்!

உங்களின் அழைப்பிற்கு காத்து இருக்கின்றோம்!

அழையுங்கள் வருகிறோம். உங்கள் இல்லம் நோக்கி!!

மகிழ்ச்சி நிறைந்த உலகைக் காண்போம்! வாருங்கள்!!

கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகிகள் :

| செ. ஆசை அலங்காரம் | சுப. செல்வம் | சே.சந்திரசேகரன் |
|---|---|---|
| 96294 67287 | 94444 68900 | 98404 39115 |
| தலைவர் | செயலாளர் | பொருளாளர் |

**கட்டுரையின் கருவும், உருவும் :**

**கல்விக் காவலர் திரு சுப. நேசமணி, துளசி மெடிக்கல்ஸ், சென்னை**

★★★★★

# அரசுப் பள்ளிகளுக்கு புரவலர் நன்கொடை வழங்குதல்

10-02-2019 அன்று நடைபெற்ற கல்வி வளர்ச்சிக் கழக நிர்வாகக் குழு கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின்படி அரசுப் பள்ளிகளுக்கு புரவலர் நன்கொடை வழங்கும் திட்டத்தை நிறைவேற்றும் பொருட்டு கீழ்க்காணும் அரசுப் பள்ளிகளுக்கு ஒவ்வொரு பள்ளிக்கும் ரூ. 5000/- வீதம் வழங்கப் பெற்றது.

1. சிறுகுடி அரசு மேல்நிலைப்பள்ளி
2. சொக்கம்பட்டி அரசு உயர்நிலைப்பள்ளி
3. கம்பிளியம்பட்டி அரசு மேல்நிலைப்பள்ளி
4. கொட்டாம்பட்டி அரசு பெண்கள் மேல்நிலைப்பள்ளி
5. சிங்கம்புணரி ஊராட்சி ஒன்றிய துவக்கப்பள்ளி, பிரான்மலை ரூ. 3000/-

தலைவர் திரு. செ. ஆசை அலங்காரம், செயலாளர் திரு. சுப. செல்வம் ஆகியோர்கள் நேரில் சென்று, அந்தந்த ஊர் நகரத்தார்கள் முன்னிலையில், பள்ளிகளின் தலைமை ஆசிரியர்களிடம் அதற்குரிய காசோலைகள் வழங்கப்பெற்றது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றோம்.

**- சுப. செல்வம், செயலாளர்**

★★★★★

## *மதுரை அ.வ.ந. சங்க ஆண்டுவிழா*

30.12.2018 ஞாயிற்றுக்கிழமை காலை 8-00 மணி அளவில் நமது அருவியூர் வடக்குவளவு நகரத்தார் மதுரை சங்கத்தின் 25-வது ஆண்டு விழா அழகர் கோயில் ரோடு, கள்ளந்திரியில் உள்ள மதுரை சங்கத்தின் சொந்த இடத்தில் தலைவர் M.M. தியாகராஜன், செயலாளர் NTR. இராமமூர்த்தி பொருளாளர் K. இராசாங்கம் ஆகியோர்களின் முன்னிலையில் சிறப்பாக நடைபெற்றது.

காலை 8-மணிக்கு உணவுக்குப் பின் கடவுள் வாழ்த்துடன் தொடங்கி முன்னுரை, ஆண்டறிக்கை, வரவுசெலவு அறிக்கைகள் போன்றவை வாசிக்கப்பட்டது. பின் குழந்தைக்களுக்கான தனித்திறமை நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டது. மாணவர்கள், பெரியவர்கள் போன்றவர்களுக்கான நிகழ்ச்சிகளும் நடத்தப்பட்டது. மதுரை மக்கள் அனைவரும் உற்சாகமாக பங்கேற்றனர். விழாவின் இறுதியில் வெற்றி பெற்றவர்களுக்கு பரிசுகள் வழங்கி கௌரவிக்கப்பட்டது. இடையிடையே குழுக்கள் முறையிலும் பரிசுகள் வழங்கப்பெற்றன. மதிய உணவுடன் விழா இனிதே நிறைவுபெற்றது.

**தகவல்: NTR. இராமமூர்த்தி, மதுரை**

★★★★★

**கோடை விடுமுறை.....**

# பெற்றோரின் கடமை

ஆசிரியர் குழு

ஏப்ரல், மே மாத கோடை விடுமுறையில் உங்கள் குழந்தைகளுக்கு, பயனுள்ளதைச் சொல்லிக் கொடுக்கலாம். எங்கே? எப்படி? நீங்கள் உங்களது ஒரு பிள்ளைக்குச் செய்வதை, உங்களது ஊரில் உள்ள / தெருவில் உள்ள நான்கு அல்லது ஐந்து குழந்தைகளைச் சேர்த்து ஒவ்வொருவரும் ஒரு நாள் அழைத்துச் செல்லலாம். மற்ற பெற்றோர்களிடம் கலந்து பேசி அவர்களுடைய குழந்தைகளையும் சேர்த்து இதனைச் செய்யலாம்!

1. அருகிலுள்ள பிள்ளையார், மாரியம்மன், சிவன் இவை போன்ற கோயில்களுக்கு அழைத்துச் சென்று கோயில் வழிபடும் முறைகளையும் அங்குள்ள தெய்வங்களின் பெயர்களையும், சிறப்புக்களையும் சொல்லிக் கொடுங்கள். அவசியம் இரண்டு தெய்வப் பாடல்களைச் சொல்லிக் கொடுங்கள்.

2. வங்கி, அஞ்சலகம், காவல்நிலையம், அரசு அலுவலகங்கள் போன்றவற்றிற்கு அழைத்துச் சென்று அங்குள்ள சேவைகளை நாம் எப்படி உபயோகிக்கிறோம் என்பது பற்றி விளக்கமாக எடுத்துச் சொல்லுங்கள். ATM-இல் பணம் எடுப்பது எப்படி? சிறு சேமிப்பின் அவசியம், போஸ்ட்டல் கட்டணம் இவை பற்றி சொல்லிக் கொடுங்கள்.

3. உங்களது ஊரில் உள்ள அரசு மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று அங்கு கிடைக்கும் பல்வேறு சேவைகளைப் பற்றித் தெரிவித்து, 'சுத்தம் சோறுபோடும்' என்பதன் அவசியத்தை உணர்த்துங்கள்!

4. உங்களது சொந்தக் கிராமத்தில் இன்னும் வீடு வைத்திருந்தால் அங்கு அழைத்துச் சென்று கிராம வாழ்க்கை VS நகர வாழ்க்கை, கிராமத்து அமைதியான வாழ்க்கை முறை, பரபரப்பான நகர வாழ்க்கை பற்றியும் எடுத்துரைப்பதுடன், மரம் சத்துள்ள காய்கறிகள், தூய சத்துள்ள பால் இவைகளைப் பற்றிச் சொல்லிக் கொடுங்கள்!

5. அருகிலிருக்கும் குளம், குட்டை, கண்மாய், ஆறு, கடல் இவற்றிற்கு அழைத்துச் சென்று அதில் தண்ணீர் இருந்தால் நீச்சல் கற்றுக் கொடுங்கள். இவைகளின் பெயர், தோன்றும் இடம், பயன்பாடுகள் போன்ற விவரங்களை சொல்லிக் கொடுங்கள்.

6. உங்கள் ஊரில் மிருகக்காட்சி சாலை இருந்தால் அல்லது ஒரு நாள் வண்டலூர், கிண்டி பாம்புப் பண்ணை போன்றவற்றிற்கு அழைத்துச் சென்று, LKG, UKG படம் பார்த்தல், படித்ததை நேரில் காண்பித்து மகிழுங்கள்.

7. குறைந்தது தினம் ஒரு மணி நேரம் செலவிட்டு காலை 6 முதல் 7 மணி வரை அல்லது மாலை 6 மணி முதல் 7 மணி வரை உங்கள் வீட்டிற்குப் பக்கத்தில் உள்ள சிறுவர் பூங்காவிற்கு அழைத்துச் சென்று விளையாட விடுங்கள்! பிறக்கும் எவ்வளவு ஆர்வத்துடன் உற்சாகத்துடன் விளையாடுகிறார்கள் என்பதைக் கண்டு மகிழ்ச்சி அடையுங்கள்!

8. உங்களுக்குத் தெரிந்த உடற்பயிற்சி - யோகா தெரிந்திருப்பின் அதனை உங்கள் குழந்தையோடு நீங்களும் சேர்ந்து செய்து மகிழுங்கள்.

இப்படிப் பல.... உங்கள் மனதில் உதிப்பதை உங்கள் குழந்தையுடன் பகிர்ந்து மகிழ இந்தக் கோடைகாலத்தைப் பயன்படுத்துங்கள்!

மேலே குறிப்பிட்டவாறு நடைமுறைப்படுத்தும்போது நாம் நம் குழந்தைகளின் விடுமுறை நாட்களை அவர்கள் பயன்பெறுமாறு கழிக்க உதவுவதுடன், நாமும் நமது தினசரி வாழ்க்கைச் சூழலிருந்து, மாறுபட்ட அனுபவத்தைப் பெறுவோம்.

- ஆசிரியர் குழு

*****

## சந்தேகம் தீர்க்க..... கேள்வி–பதில்

வாசகர்களின் நல்வாழ்வு பற்றிய சந்தேகங்கள் மற்றும் கேள்விகட்கு பதிலளிக்க நம்மவர் இயற்கை மருத்துவர் திரு. S. தியாகராஜன் BNYS அவர்கள் இசைந்துள்ளார்கள். வாசகர்கள் நல்வாழ்வு பற்றிய கேள்விகளை – நகரத்தார் குரல் முகவரிக்கு அனுப்பிவைக்கவும்.

**– பதிப்பாசிரியர்**

*****

# கவி.கொ. கணேசனின்
# கவிதைப் பூக்கள் நூல் வெளியீடு

கொட்டாம்பட்டி தியாகி ம.சி.கு. குழந்தைவேல் செட்டியார் – ராஜம்மாள் ஆச்சி ஆகியோரின் இளைய மகனாகிய கோவை (இருப்பு) கவி. கொ. கணேசனின் "கவிதைப் பூக்கள்" என்ற கவிதைத் தொகுப்பு நூல் வெளியீடு 17.03.2019, ஞாயிறு அன்று சென்னை நங்கநல்லூர் நம்மவரின் வாழ்க வளமுடன் அரங்கில், இலக்கியச் சோலை திங்களிதழின் மகளிர் சிறப்பிதழ் வெளீயீட்டு விழாவுடன் இனிதே நடைபெற்றது.

கவி.கொ. கணேசனின் கவிதைப் பூக்கள் முதல் பிரதியினை திரைப்பட இயக்குநர், வாழ்நாள் சாதனையாளர், கலைமாமணி S.P. முத்துராமன் அவர்கள் பொன்கரத்தால் வழங்க நமது அருவியூர் வடக்குவளவு நகரத்தார் கல்வி வளர்ச்சிக் கழகத்தின் தலைவர் செ. ஆசை அலங்காரம் அவர்கள் பெற்றுக்கொண்டார்.

கவிஞர் பெருமக்கள், முனைவர் பெருமக்கள் மற்றும் சென்னை அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்க உறுப்பினர்கள் கலந்துகொள்ள விழா சிறப்பாக நடைபெற்றது.


இலக்கியச் சோலை
பாராட்டுச் சான்றிதழ்
'இலக்கியச்சோலை' சார்பில் சென்னை நங்கைநல்லூரில் நடைபெற்ற மகளிர் தின சிறப்புக் கவியரங்கில் சிறப்பான கவிதையை வழங்கியமைக்காக
கவிஞர் கொ. கணேசன்
அவர்களின் கவியாற்றலைப் பாராட்டும் வகையில் வழங்கப்படும் பாராட்டுச் சான்றிதழ்.
17-03-2019
எஸ்பி. முத்துராமன் | என் ஆர் கே | கோ.பெரியண்ணன் | சோலை தமிழினியன்







காலம் கவிஞனின் கடிகாரம்
கவிதை காலத்தின் கணிப்பொறி
கோவை வசந்தவாசல் கவிமன்றம்
9/68,பெரியார் நகர், நேருநகர் கிழக்கு, விமான நிலையம் அஞ்சல், கோவை – 641 014
அலைபேசி எண் : 98422 38022
நற்சான்றிதழ்
நிகழ்வு "மகளிர் தினவிழா" சிறப்புகவியரங்கம்
நாள் 16.03.2019 நடைபெற்ற கவிதை வாசிப்பு நிகழ்ச்சியில்
கவிஞர். கொ. கணேசன் அவர்கள்
பங்கேற்றதை /............ பரிசு பெற்றதை பாராட்டியும், வாழ்த்தியும் வழங்கும் நற்சான்றிதழ்.
தலைவர் | பொருளாளர் | செயலாளர்

**தகவல் : கவி.கொ. கணேசன், கோவை.**

உ

ஸ்ரீ வயிரவ சுவாமி துணை

**வாழ்த்துக்களுடன்**

கடை : **04333 - 262215** வீடு : **04333 - 260364**



# சிவசக்தி ஸ்டோர்

97, அண்ணாசாலை,

பொன்னமராவதி

மளிகை, ஆயில், ஸ்டேஷனரி மற்றும்

குளிர்பானங்கள்

மொத்தம் & சில்லறை

# அன்னம் டிரேடர்ஸ்

70B, மெயின் ரோடு,

பொன்னமராவதி

**ஸ்டாக்கிஸ்ட் :** நெஸ்டில், AVT Tea,

கணேஷ் பீடி, ஊர்வசி சோப்,

ராஜம் சுக்கு காபி





# சிவம் ஏஜென்சீஸ்

6A, ஆஸ்பத்திரி ரோடு,

பொன்னமராவதி

**ஸ்டாக்கிஸ்ட் :** அமுல் (இந்தியா),

கோத்ரெஜ், டாபர் பேஸ்ட்

# உயர்கல்வி திட்டமிட சில யோசனைகள்

**– திரு. S. தியாகராஜன்** B.N.Y.S. திருச்சி

பெற்றோர் மற்றும் மாணவர்களின் கவனத்திற்கு இதைத் தெரிவிக்க விழைகிறேன்.

B.E. / M.B.B.S. / C.A. போன்ற கல்வி முறைகள் போல B.Sc. (Agriculture), B.V.Sc. B.N.Y.S (Bachelor of Naturapathy Yoga Scinece) B.S.M.S. (Bachelor of Siddha Medical Science) B.H.M.S (Bachelor of Hemoepathic Science) போன்ற கல்வி முறைகளும் நல்ல வேலை வாய்ப்புகளை தருகிறது. நல்ல வருமானமும், மதிப்பும் கிடைக்கும். No Retirement உழைப்புக்கேற்ற ஊதியம் வாழ்நாள் முழுவதும் பெறலாம். அரசு பணி. தனியார் நிறுவன வேலை வாய்ப்பு / வருவாய் உள்ளது. சுயமாக உழைத்து சொந்தத் தொழிலை அமைத்து நாட்டுக்குச் சேவை செய்யலாம். நல்ல புரட்சியை உருவாக்கலாம்.

## B.Sc. (Agriculture) Agriculture is our National Culture

130 கோடி மக்கள் தொகை கொண்ட நம் நாட்டில் விவசாயம் முக்கியத் தொழிலாக, வேலைவாய்ப்பாக வாழ்க்கை முறையாக உள்ளது. வேளாண்மை அறிவியல் படித்தவர்கள் தேவை அதிகம். நம் நாட்டில் உணவு உற்பத்தி, waste management, Food processing, water irrigation என சேவைகள் காத்திருக்கிறது.

கோவை, தமிழ்நாடு வேளாண்மை பல்கலைக் கழகம் இதற்கு உட்பட்ட கல்லூரிகள் முழுநேர B.Sc. / M.Sc. / Ph.D படிப்புகளை தருகிறது. முடித்தவுடன் நல்ல வேலை வாய்ப்பு. வேளாண் பட்டதாரிகள் பலர் இன்று IAS / IPS Cadre-ல் உயர் அதிகாரிகளாக ஜொலிக்கிறார்கள். சுயமாக நம்மாழ்வார் போன்றவர்களைப் போல உழைத்து புரட்சியை உருவாக்கலாம்.

இதைத் தவிர தொலைதூர கல்வித் திட்டத்தில் சான்றிதழ் கல்விகளை ஆர்வம் உள்ள எவரும் படிக்கலாம்.

## B.V.Sc., (Bachelor of Veternery Science)

கால்நடை மருத்துவமும், நிர்வாகமும் முக்கிய தேவையாக உள்ளது. வீட்டு பிராணிகள் உழவனின் நண்பன். வன விலங்குகள் சுற்றுச் சூழல் பாதுகாவலன். நம்மை சுற்றியுள்ள பிராணிகளுக்கு மருத்துவ சேவை செய்து வருமானம் பெற மதிப்பு பெற, டாக்டராக

B.V.Sc., படிக்கலாம். முடித்தவுடன் நல்ல வேலை / வருமானம் பெற வாய்ப்பு. நல்ல சேவை செய்யலாம். புண்ணியமும் பெறலாம்.

தமிழ்நாடு கால்நடை மருத்துவ பல்கலைக்கழகம் இந்த படிப்பை தருகிறது. இதே பல்கலைகழகத்தில் B.F.Sc-யும் இருக்கிறது.

B.V.Sc., படித்து சொந்த தொழில் செய்யலாம். அரசு வேலை பெறலாம். IAS / IPS Cadre உள்ள அதிகாரியாகவும் ஆகலாம்.

**B.N.Y.S. (Bachelor of Naturopathi Yoga Science)**

**B.S.M.S. (Bachelor of Siddha & Medical Science)**

**B.H.M.S. (Bachelor of Homeopathic Science)**

தமிழ்நாடு M.G.R. மருத்துவ பல்கலைக் கழக அங்கீகாரம் பெற்ற கல்லூரிகளில் இதைப் படிக்கலாம்.

B.N.Y.S. (யோகா மற்றும் நல்வாழ்வு முறைகள்) 5½ வருட மருத்துவ கல்வி பெற்று நல்ல மதிப்பும் / வருமானமும் பெறலாம். அரசு / தனியார் மருத்துவமனைகளில் வேலை வாய்ப்பு உள்ளது. சொந்தமாக கிளினிக்/மருத்துவமனை நடத்தி சேவை செய்யலாம்.

தற்போது தொடங்கப்பட்ட M.D. (யோகா நல்வாழ்வியல் அக்குபஞ்சர் உணவு மருத்துவம்) போன்ற உயர் மருத்துவ கல்வியும் பெறலாம். முயற்சி செய்து NABH / CLINICAL ESTABLISHMENT தர வரிசை மருத்துவமனைகள் அமைத்து நல்ல சேவைகளை வழங்கலாம்.

மேலும் B.S.M.S. / B.H.M.S போன்ற படிப்புகளும், இணையான தகுதிகளும் / மதிப்பையும் தருகிறது.

**B.Sc., (General Psychology)**

**B.Sc., (Clinical Psycholog)**

**BPT (Bachelor of Physiotherapy)**

இது போன்ற மருத்துவம் தொடர்பான கல்வி பெற்று நல்ல சேவை செய்யலாம். நல்ல வருமானம் உண்டு.

L.L.B., M.L சட்டம் பயின்று சட்ட ஆலோசகராக செயல்பட்டு நீதிமன்ற சுமைகளை குறைக்கலாம். நல்ல வருமானம் பெறலாம்

12-வது படித்து முடித்த மாணவர்கள் மேற்கண்ட option-களையும் யோசித்து முடிவு எடுக்கவும்.

*****



## வாழ்த்துக்கள்!

மதுரை ஆனையூர் திரு. A. அசோகன் – கார்த்திகா இவர்கள் புதல்வி காவ்யா, சிவபாபா நர்சரி & பிரைமரி பள்ளியில் 4-ஆம் வகுப்பில் கணிதம் பாடத்தில் இரண்டுமுறை 100/100-ம், பொது அறிவு பாடத்தில் ஒருமுறை 100/100-ம் மதிப்பெண் பெற்றுள்ளார். வாழ்த்துக்கள்! தகவல் : திரு. அசோகன், மதுரை.

★★★★★



## மாநில அளவில் முதலிடம்

திண்டுக்கல் திரு. S. சரவணன் – சுதா இவர்களின் மகள் விஷாலி மாநில அளவில் யோகா போட்டியில் கலந்து கொண்டு முதல் பரிசு பெற்றுள்ளார். இவர் மாவட்ட அளவில் நடைபெற்ற போட்டிகளில் கலந்து கொண்டு பரிசு பெற்றுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. **தகவல் : S. சரவணன், திண்டுக்கல்.**

★★★★★

# கல்விக் காவலர்
# திரு. M.M. தியாகராஜன் அவர்களின்
# 75 வயது நிறைவு விழா

புழுதிபட்டி/மதுரை கல்விக் காவலர் மதுரை அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கத் தலைவர் திரு. M.M. தியாகராஜன் அவர்களின் 75-வயது நிறைவு விழா சென்னையில் அவரது மூத்தமகன் திரு. சிவபாரதி - மீனாட்சி அவர்களின் இல்லத்தில் 03-04-19 புதன்கிழமை காலை 9.30 மணி அளவில் கணபதி பூஜை, நவக்கிரக ஹோமம், நட்சத்திர ஹோமம், ம்ருத்ஞ்சய ஹோமம், ஆயுள் ஹோமம் முதலியனவைகளுடன் சிறப்பாக நடைபெற்றது.

பங்காளிகள், உறவினர்கள் மற்றும் நண்பர்கள் கலந்து கொண்டு ஆசி பெற்றுச் சிறப்பித்தனர். **தகவல் : தி. சிவபாரதி, சென்னை**

## 75-வயது நிறைவு நாள் வாழ்த்து!

பெருமைமிகு பெரிய செட்டியார் குடும்பத்தில் உதித்தீர்! அய்யா,
மதிப்பிற்குரிய மங்கைபாகன் முத்தாண்டி வாரிசாய் வளர்ந்தீர்
புத்தி பலம், **மனோகரன்** பலம் **கொண்டு சோம சுந்தரத்தின்**
தமையனாய் துள்ளி விளையாடி வளர்ந்தீர்!

மண்ணவரும் விண்ணவரும் போற்ற பட்டம் பெற்றீர்!
பாசத்தில் நேசத்தில் வெற்றி கண்டு, வம்சத்தை வளர்த்தீர்!
உடன்பிறந்தார் உற்றாருக்கும் உதவிகள் பல செய்தீர்!
கல்வி கேள்வி ஞானம் பெற்று பண்பாளர் ஆனீர்!

ஆசிரியர் பணியில் பக்குவமாய் பரிணமித்தீர்! பின்
தந்தை வழியில் பாங்குடனே பாக்கு வியாபாரத்தில்
புகுந்து புதுப்பொலிவுடன் முன்னேற்றம் கண்டீர்!
காலங்களில் **வசந்தமாய்,** காதலில் **ஜெயமாய்,**

வண்ணங்களில் **சிகப்புமாய்,** மதுரைக்கு **மீனாட்சியாய்,**
உங்கள் வாழ்க்கைத் துணையாம் **ஜோதிமணியைக்**
கரம்பிடித்து இல்லறத்தை நல்லறமாக்கினீர்!

**பாரதி**யின் கூற்றாய், நிமிர்ந்த நடையாய் நானிலம் போற்ற
நன்னெறி நவின்று, வணிகம் வளர்த்தீர்!
கல்வித் தந்தை தாயாய் பிள்ளைகளை பாங்குடன்
M.Com., B.Tech., M.Com., பட்டங்கள் பெறச் செய்தீர்!

யாம் பெற்ற இன்பம் பெறுக நம் சமூகமும் என்று
கல்வி வளர்ச்சிக்காக கல்விக் காவலர் ஆயினீர்!
அம்மணிக்கு பொன்னகை, உங்களின் புன்னகை
வாழ்வில் ஓர் நம்பிக்கை நட்சத்திரம் ஆனீர்!

இன்று நீங்கள் கொண்ட அனுபவமே, எங்களின் அகவையாய்
நாளை உங்கள் வாழ்க்கை நம் தலைமுறைக்கு
வழிகாட்டியாய் ஆத்ம **ஜோதி ராஜனாய்** வருங்காலம் எண்ணி
நலமுடன் சுற்றங்கள் சூழ, சிகரமாய் வாழ்வீர்!

சிம்மக்குரலில் சிலிர்க்க சிந்திக்க வைக்கும் கனிவான
**கவி தர**மான பேச்சு பலருக்கு உங்களின் தீர்ப்பு!
பார்ப்பவருக்கு பலாப்பழமாய், பழகினால் அதன் சுவையாய்
அதன் தேன் சுளையாய் இருப்பீர்!

குடும்பத்தின் இகபர சுகதர வாழ்வு அமைய நீங்கள்
**சுதா**ரித்து வாரிசுகளின் **பிரபு**வாய் விளங்குகிறீர்!
ஓடும் குதிரையாய் திரவியம் தேடி, சேர்த்த செல்வங்கள்
சிக்கனத்தில் உதித்த **சிகப்பி**யின் பேரனாய்

**சிவபாக்கியத்தின்** மைந்தனாய், பேர் விளங்கும்
புழுதிபட்டியின் புதுமை கண்டீர்!
தளிர்களுக்கு தியாகமாய் ரத்தினம் மிக்க
**ஜோதிமணி**யின் **தியாகராஜா**வாய்த் திகழ்ந்தீர்! நீவீர்!

இன்று வைரவிழா கண்ட நீவீர் எண்பது, தொன்னூறு,
நூறு என பல்லாண்டு வாழ்ந்து இன்புற்று இருக்க,
எல்லாம் வல்ல மங்கைபாகர் தேனம்மை
இறையருளை வேண்டி வாழ்த்துகிறேன்!

**வாழ்த்துவது பேத்தி பத்மா அரவிந்த்** B.E., **சென்னை**

# மூதுரை

### ஔவையார் இயற்றியது

### கடவுள் வாழ்த்து

வலிமை பொருந்திய அழகிய உடலினையும் தும்பிக்கையையும் உடைய விநாயகக் கடவுளின் திருவடிகளை மலர் கொண்டு வழிபாடு செய்பவர்க்குச் சொல்வளம் உண்டாகும்; இலக்குமியின் கருணையால் செல்வம் உண்டாகும்; உடல் நலமும் உண்டாகும்.

1. தென்னைமரம் வேரால் உண்ட நீரை இனிய சுவையுடைய இளநீராக்கி முடியாலே தருகின்றது. அதுபோல, நாம் பிறர்க்குச் செய்யும் உதவி நமக்குத் தவறாமல் வந்து சேரும். ஆதலால் என்றும் நன்மையே செய்க.

2. பிறர் தமக்குச் செய்த உதவியை நல்லோர் தம் உயிர் உள்ளளவும் மறக்க மாட்டார். பிறர் தமக்குச் செய்த உதவியைத் தீயோர் நீர்மேல் எழுத்துப் போல் உடனே மறந்து விடுவர்.

3. காலமல்லாத காலத்தில் பூத்த மலரும் கணவன் இல்லாத பெண்ணின் அழகும் பயன்படாவாம். அவை போல, இளமையில் வறுமையும் முதுமையிற் செல்வமும் பயன்படாவாம். துன்பம் செய்யும்.

4. பாலைத் தீயிலிட்டுக் காய்ச்சினாலும் சுவை குறையாது. சங்கினைச் சுட்டு நீறாக்கினாலும் தன் வெண்மை நிறத்தையே தரும். அவைபோல மேன்மக்கள் துன்பம் வந்த போதும், தம் உயர் குணத்தினின்றும் மாறுபடார்; கீழோர் கலந்து பழகினாலும் நண்பர் ஆகார்.

5. கிளைத்துத் தழைத்த வளமான மரங்களாயினும் அவை பழுக்குங்காலம் வந்தாலன்றிப் பழுக்க மாட்டா. அதுபோல, கை கூடும் காலம் வந்தாலன்றி, எச்செயலும் எவ்வளவு முயன்றாலும் கை கூடாது. ஆகையால் காலமறிந்து செய்க.

# மூதுரை

**ஔவையார் இயற்றியது**

**கடவுள் வாழ்த்து**

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு.

***நன்மை செய்தால் நன்மை வரும்***

1. நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா - நின்று
தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்.

***நல்லோர்க்குச் செய்த உதவி நிலையாக நிற்கும்***

2. நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்
கல்மேல் எழுத்துப்போற் காணுமே - அல்லாத
ஈரமிலா நெஞ்சத்தார்க் கீந்த உபகாரம்
நீர்மேல் எழுத்திற்கு நேர்.

***இளமையில் வறுமை***

3. இன்னா இளமை வறுமைவந் தெய்தியக்கால்
இன்னா அளவில் இனியவும் - இன்னாத
நாளல்லா நாட்பூத்த நன்மலரும் போலுமே
ஆளில்லா மங்கைக் கழகு.

***மேன்மக்கள் இயல்பு***

4. அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்
நட்டாலும் நண்பல்லார் - நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

***காலமறிந்து செய்தல்***

5. அடுத்து முயன்றாலும் ஆகுநாள் அன்றி
எடுத்த கருமங்கள் ஆகா - தொடுத்த
உருவத்தால் நீண்ட உயர்மரங்கள் எல்லாம்
பருவத்தா லன்றிப் பழா.

6. கல்லால் ஆகிய தூண் பெரும் பாரம் தாங்க நேர்ந்தால் வளையாமல் பிளந்து முறியும். அதுபோல, மானம் உடையோர் மானக்கேடு வருமிடத்து உயிரை விட்டு மானத்தைக் காப்பர்.

7. நீரினது உயரத்தின் அளவே அல்லிக் கொடி இருக்கும். அதுபோல ஒருவர்க்கு அவர் கற்ற நூலின் அளவே அறிவு அமையும். செய்த தவத்தின் அளவே செல்வம் அமையும்; பிறந்த குடியின் இயல்புக்கு ஏற்றவாறே குணம் அமையும்.

8. நல்லவரைக் காண்பதும் அவர் சொற்களைக் கேட்பதும் நன்மையாகும்; அவருடைய நல்ல குணங்களைப் பேசுவதும் அவரோடு கூடியிருப்பதும் நல்லறிவும் நல்லொழுக்கமும் தரும்.

9. தீயவர்களைக் காண்பதும் அவர்கள் சொற்படி நடத்தலும் தீமையாகும். தீயவர்களின் குணங்களைப் பேசுவதும் அவர்களுடன் நட்புக் கொள்ளுதலும் தீமையாய் முடியும்.

10. நெல்லுக்கு இறைத்த நீரால் புல்லும் வளம்பெறும். அது போல நல்லோரைச் சார்ந்த எல்லோரும் பயனடைவர்.

11. முன்னே முளைப்பது அரிசியேயானாலும் உமி நீங்கி விடின் அரிசி முளைக்காது. ஆதலால் வல்லமை உடையார்க்கும் துணை வலிமையில்லாமல் எடுத்த காரியத்தைச் செய்ய முடியாது.

12. பெரிய இதழையுடைய தாழைக்கு மணம் இல்லை; உருவத்தில் சிறிய மகிழம்பூ இனிய மணம் உடையது. கடல் உருவத்தால் பெரியது. எனினும் அதன் நீரில் குளிக்கவும் முடியாது. கடல் அருகில் உள்ள சிறிய ஊற்றுநீர் குளிப்பதற்கே அன்றிக் குடிக்கவும் பயன்படும். ஆதலால் தோற்றத்தால் பெரியவர் குணத்தால் சிறியராதலும் தோற்றத்தால் சிறியவர் குணத்தால் பெரியவராதலும் உண்டு.

### *உயிரினும் மானம் பெரிது*

6. உற்ற இடத்தில் உயிர்வழங்கும் தன்மையோர்
பற்றலரைக் கண்டாற் பணிவரோ – கற்றூண்
பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரம் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான்.

### *அறிவு செல்வம் குணம் அமைதல்*

7. நீரளவே யாகுமாம் நீராம்பல் தான்கற்ற
நூலளவே யாகுமாம் நுண்ணறிவு – மேலைத்
தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம்
குலத்தளவே யாகும் குணம்.

### *நல்லார் தொடர்பால் வரும் நன்மை*

8. நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே – நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று.

### *தீயவர் தொடர்பால் வரும் தீமை*

9. தீயாரைக் காண்பதுவும் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவும் தீதே – தீயார்
குணங்கள் உரைப்பதுவும் தீதே அவரோடு
இணங்கி இருப்பதுவும் தீது.

### *நல்லோரால் எல்லோர்க்கும் நன்மை*

10. நெல்லுக் கிறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்
புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம் – தொல்லுலகில்
நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு
எல்லார்க்கும் பெய்யு மழை.

### *துணை வலிமை வேண்டும்*

11. பண்டு முளைப்ப தரிசியே யானாலும்
விண்டுமி போனால் முளையாதாம் – கொண்டபேர்
ஆற்றல் உடையார்க்கும் ஆகா தளவின்றி
ஏற்ற கருமம் செயல்.

### *உருவமும் குணமும்*

12. மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம்
உடல்சிறிய ரென்றிருக்க வேண்டா – கடல்பெரிது
மண்ணீரு மாகா ததனருகே சிற்றூறல்
உண்ணீரு மாகி விடும்.

13. காட்டில் வளர்ந்து நிற்கும் மரங்களைக் காட்டிலும் படிப்பறிவு இல்லாதவனும் ஒருவருடைய குறிப்பை அறியாதவனும் நல்ல மரங்களாவர். காரணம் மனித மரங்கள் பார்க்கும், நடக்கும், பேசும்.

14. வான்கோழி தன்னை மயிலாக நினைத்து ஆடினாலும் மயிலாகாது. அதுபோலக் கல்லாதவன் கற்பவர் போல் நடித்தாலும் கற்றவன் ஆகான்.

15. வேங்கைப் புலியின் நோயைத் தீர்த்த விடவைத்தியன் அப்பொழுதே அப்புலிக்கு இறையானாற் போலத் தீயவர்க்கு உதவி செய்யின் அவர் தமக்குச் செய்த உதவியை மறந்து அப்பொழுதே கேடு செய்வர்.

16. கொக்கு தனக்கேற்ற பெரிய மீன் வருமளவும் அமைதியாக இருப்பது போலப் பெரியவர்களும் தமக்கு ஏற்ற காலம் வரும் வரை அடங்கியிருப்பார்கள். அடக்கத்தை அறியாமை என்று நினைத்து அவர்களை வெல்ல நினைப்பவன் தோற்றுப் போவான்.

17. நீர்வற்றியவுடன் குளத்தினின்று நீங்கிப் போகும் நீர்ப் பறவை போன்று நமக்குத் துன்பம் வரும்போது நம்மை வீட்டு நீங்குபவர் உண்மையான உறவினர் ஆகார். அக்குளத்தில் உள்ள கொட்டியும் அல்லியும், நெய்தலும் போலத் துன்பத்திலும் பங்கு கொள்பவரே உண்மையான உறவினர் ஆவார்.

18. பொற்குடம் உடைந்தாலும் பொன்னாகிப் பயன் தரும். அது போல மேன்மக்கள் வறுமை அடைந்தாலும் மேன்மைக் குணத்திலிருந்து மாறுபடார். மண்ணால் ஆகிய குடம் உடைந்தால் ஒன்றுக்கும் பயன்படாது. அதுபோல, கீழோர் வறுமை அடைந்தால் மேலும் கீழ்மைக் குணம் உடையவராவார்.

19. அளவற்ற நீர் உடைய கடலுள் ஒரு படியை ஆழ அமுக்கி முகந்தாலும் அது நாலுபடி நீரை மொள்ளாது. அதுபோல, ஒரு பெண்ணுக்கு மிக்க பொருளும் தக்க கணவனும் கிடைத்தாலும், பழவினையின் அளவின்றி மிகுதியாய்த் துய்க்க முடியாது.

### காலமறிந்து செய்தல்

13. கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள் - சபைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன்நன் மரம்.

### போலி அறிவின் இழிவு

14. கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி
தானு மதுவாகப் பாவித்துத் - தானுந்தன்
பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே
கல்லாதான் கற்ற கவி.

### தீயோர்க்கு உதவின் தீங்கே வரும்

15. வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி
ஆங்கதனுக் காகாராம் ஆனாற்போல் - பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த உபகாரம்
கல்லின்மேல் இட்ட கலம்.

### அடக்கத்தை இகழாதே

16. அடக்க முடையார் அறிவிலரென் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா - மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு.

### உண்மையான உறவினர்

17. அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர் - அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உறவு.

### கெட்டாலும் மேன்மக்கள் குணம் மாறார்

18. சீரியர் கெட்டாலும் சீரியரே சீரியர்மற்
றல்லாதார் கெட்டாலங் கென்னாகும் - சீரிய
பொன்னின் குடமுடைந்தாற் பொன்னாகும் என்னாகும்
மண்ணின் குடமுடைந்தக் கால்.

### ஆசையாற் பயனில்லை

19. ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
நாழி முகவாது நானாழி - தோழி
நிதியுங் கணவனும் நேர்படினும் தந்தம்
விதியின் பயனே பயன்.

20.உடம்புடன் பிறந்த நோயே உடலை அழிப்பது போல உடன் பிறந்தவர்களே நமக்குத் தீங்கு செய்வதுண்டு. நமக்குத் தொடர்பில்லாத மலையில் தோன்றிய மருந்து நம் நோயைத் தீர்ப்பது போல, நமக்கு அயலவர்களால் நன்மை விளைவதும் உண்டு.

21. நற்குணமும் நற்செயலும் உடைய மனையாள் வாழும் வீட்டில் எல்லா நன்மையும் நிறைந்திருக்கும். மனைவி இல்லாவிடினும், மனைவி கடுஞ் சொற்களைப் பேசுபவளாக இருப்பினும், அவ்வீடு புலி வாழும் புதருக்கு ஒப்பாகும்.

22.நல்ல பயனைப் பெறலாம் என்று நினைத்துக் கற்பக மரத்தை அடைந்தோர்க்கு அது கொடிய கசப்புடைய எட்டிக் காயைக் கொடுக்குமாயின் அதற்குக் காரணம் முற்பிறப்பிற் செய்த தீவினையேயாகும். ஆதலால் மனமே, நீ நினைத்தபடி ஒன்றும் நடவாது. ஊழின்படியே நடக்கும்.

23.கோபத்தினால் வேறுபட்ட விடத்துக் கீழ்மக்கள் கல்லின் பிளவைப் போல் மீண்டும் ஒன்று கூடார்; இடையாயர் பொன்னின் பிளவைப் போல் ஒருவர் கூட்டக் கூடுவர். சான்றோர் நீரின் பிளவு போலப் பிரிந்த உடனே தாமே கூடுவர்.

24.தாமரைப் பூவை அன்னம் சேர்ந்தாற் போலக் கற்றவரைக் கற்றவரே விரும்புவர். இடுகாட்டில் உள்ள பிணத்தைக் காக்கை விரும்புவது போலக் கல்வியில்லாத மூடரை மூடரே விரும்புவர்.

25.நஞ்சுடைய நாகப்பாம்பு மறைந்து வசிக்கும். அதுபோல நெஞ்சில் வஞ்சனையுடையவர் தம்மை ஒளித்து ஒழுகுவர். நஞ்சில்லாத தண்ணீர்ப்பாம்பு அஞ்சாமல் கிடக்கும். அதுபோல வஞ்சனையில்லாதவர் வெளிப்படையாக ஒழுகுவர்.

26.அரசனுக்கு அவன் நாட்டில் மட்டும் சிறப்பு உண்டு. கற்றோர்க்கு செல்லும் எல்லா நாடுகளிலும் சிறப்பு உண்டு. ஆதலால் மன்னனினும் கற்றவர்க்கே சிறப்பு மிகுதி.

நல்வாழ்வு : 20

# உடல் எடையைக் குறைக்க....சீரகம்

சீர் + அகம் = சீரகம் உடல் உள்ளுறுப்புகளை சீர் செய்ய தேவை சீரகம்.

நீங்கள் உண்மையிலேயே உங்கள் எடையைக் குறைக்க விரும்புகிறீர்களா? அப்படியென்றால் கீழே குறிப்பிட்டுள்ளவைகளை முழுமனதுடன் தொடர்ந்து செய்தால் நல்ல பலன் கிட்டும்.

1. சீரகம் உடலில் கெட்ட கொழுப்புகள் சேர்வதைத் தடுத்து அதிகப்படியான கலோரிகளை எரிக்கும். உடலின் மெட்டபாலிசத்தை அதிகரிக்கும். ஊட்டச்சத்துக்களும், ஆன்டி ஆக்ஸிடெண்டுகளும் சீரகத்தில் அதிகம் உள்ளது. இதனால் சீரகத்தை அன்றாட உணவில் சேர்த்து வந்தால் கொழுப்புகளால் அதிகரித்த தொப்பையைக் குறைக்கலாம்.
2. ஒன்றரை டேபிள் ஸ்பூன் சீரகத்தை நீரில் போட்டு இரவு முழுவதும் ஊறவைத்து மறுநாள் காலையில் அந்த நீரைக் கொதிக்க வைத்து வடிகட்டி அதில் சிறிது எலுமிச்சையை பிழிந்து தினமும் காலையில் இரண்டு வாரத்திற்கு குடித்துவர உடல் எடை குறைவதை உணரலாம்.
3. ஒரு ஸ்பூன் சீரகப் பொடியை சிறிது தயிரில் சேர்த்து கலந்து தினமும் உட்கொண்டு வர உடல் எடை குறையும்.
4. அரை ஸ்பூன் சீரகப் பொடியை நீரில் சேர்த்து அதனுடன் தேன் கலந்து தினமும் குடித்துவர உடலில் உள்ள கொழுப்புகளை குறைத்து, உடல் எடையைக் குறைக்கலாம்.
5. எலுமிச்சை மற்றும் இஞ்சி இவை இரண்டும் உடல் எடையைக் குறைக்க உதவும். சீரகத்துடன் சேர்த்தால் இதன் சக்தி இன்னும் அதிகமாகும். ஒரு பாத்திரத்தில் கேரட் மற்றும் பிடித்த காய்கறிகளைச் சேர்த்து நன்கு வேகவைத்து பின் அந்தக் காய்கறிகளில் இஞ்சியைத் துருவிப் போட்டு, எலுமிச்சை சாறு, சீரகப் பொடியை சேர்த்து கலந்து இரவு நேரத்தில் உட்கொண்டு வர உங்கள் எடை குறைவதை நன்கு உணர்வீர்கள்.

உங்களது Sincerity உங்கள் எடையைக் குறைக்கும்.

★★★★★



**நல்வாழ்வு : 21**

# தண்ணீரில் குளிக்கும் சரியானமுறை

1. குளிர்ந்த நீர் - ஊக்கமருந்து மாதிரி (TONIFICATIONS)
2. சூடான நீர் - மயக்கமருந்து மாதிரி (SEDATIONS)
3. மிதமான வெந்நீர் - சீராக்கும் மருந்து மாதிரி (REGULATOR) விட்டமின் மாத்திரை மாதிரி
4. ஆஸ்த்மா, சிகரெட் பழக்கம், ஊட்டச்சத்து குறைபாடு, எலும்பு வலி, நீரிழிவு உள்ளவர்கள் குளிர்ந்த நீரில் குளிக்கலாம்..
5. மூட்டுவலி, தசைப் பிடிப்பு, தூக்கமின்மை போன்ற நோய்களுக்கு சூடான நீரில் குளிக்கலாம்.
6. உயர் தாழ்வான இரத்த அழுத்தம், அல்சர், மயக்கம், தலைவலி, நரம்பு வலி, இதய நோய் போன்ற பிரச்சனைகளுக்கு வெது வெதுப்பான நீரில் (Neutral) குளிக்க வேண்டும்.
7. நாம் குளிக்க ஆரம்பிக்கையில் பாதத்தில் ஆரம்பித்து தோள் வரை உடம்பினை மெதுவாக நனைக்க வேண்டும். இப்படிச் செய்யும் போது உச்சந்தலையிலிருந்து வெப்பம் ஆவியாக வெளியேறுவதை உணரமுடியும் அல்லது நம் உடம்பில் முடிகள் கூச்செறிவதை சிலரால் உணரமுடியும். எனவே மேற்சொன்ன முறையில் குளிக்க ஆரம்பிப்பதை வழக்கமாக கொள்ள வேண்டும். இதுவே சரியான குளியல் முறை.
8. இதற்கு மாறாக குளிக்க ஆரம்பிக்கும்போது முதலில் தலையினையோ அல்லது தலைமுடியினையோ நீரில் நனைக்கும் போது தலைக்கு வேகமாக இரத்தம் பாயும் அப்போது நமது இரத்தக்குழாய் அல்லது தமனியின் வெடிப்புக்கு காரணமாகி மாரடைப்பு ஏற்படுகிறது. குளிக்கும்போது மாரடைப்பு ஏற்படுவதை தவிர்க்க மேலே குறிப்பிட்டபடி குளித்தல் வேண்டும்.
9. ஆஸ்த்மா உள்ளவர்கள் மூச்சுவிட சிரமப்படும் நேரத்தில் - (During wheezing attack) குளிர்ந்த நீரில் குளியல் போடலாம். சூடான வெந்நீரை வாய் வைத்து சிறிது சிறிதாகக் குடிக்கலாம். படுக்கக் கூடாது. நாற்காலியில் அமர்ந்து முன்பக்க மேசையில் தலை வைத்து குனிந்து ஓய்வு எடுக்கலாம்.

★★★★★



**நல்வாழ்வு : 22**

# இதயப் பாதுகாப்பு

1) இதயம் பலப்பட ஒரு நாளைக்கு குறைந்தது அரைமணி நேரமாவது மிதமான வேகத்தில் நடைபயிற்சி மேற்கொள்ள வேண்டும்.
2) சீரகத்தை தண்ணீரில் கொதிக்க வைத்து அந்த நீரை தினமும் காலையில் வெறும் வயிற்றில் பருக வேண்டும். இந்நீர் இரத்த குழாயில் அடைப்பு ஏற்படும் வாய்ப்புகளை குறைக்கும்.
3) வெங்காயத்தில் இரத்தத்தை நீர்மைப்படுத்தும் குணமும், கொழுப்பைக் கரைக்கும் குணமும் உண்டு. தினமும் 25 கிராம் முதல் 50 கிராம் வரை வெங்காயத்தை எடுத்து கொள்வதன் மூலம் சுருங்கிய இதய வால்வுகளில் இரத்தம் எளிதாகச் சென்று வர உதவுவதுடன் கொஞ்சம் கொஞ்சமாக கொழுப்பைக் கரைத்து இதய வால்வின் அடைப்பையும் குணப்படுத்தும்.
4) தினமும் 5 பல் பூண்டினை சேர்த்து வர இதய வால்வுகளில் உள்ள அடைப்பு நீங்குவதோடு மீண்டும் இரத்த குழாயில் அடைப்பு வராமலும் தடுக்கலாம்.
5) இதய வால்வு அடைப்பு நீங்க, ஒரு டம்ளர் வடிகட்டிய எலுமிச்சைச் சாறு, ஒரு டம்ளர் பூண்டுச் சாறு, ஒரு டம்ளர் இஞ்சிச் சாறு, ஒரு டம்ளர் ஆப்பிள் சைடர் வினிகர் நான்கையும் சம அளவில் எடுத்துக் கொண்டு இந்தக் கலவையை அடுப்பில் வைத்து, குறைவான தணலில் (சிம்மில்) 60 நிமிடங்கள் வைக்க வேண்டும். **நான்கு பங்கு மூன்றாக மாறியதும்** அடுப்பை அணைத்து அதனுடன் சம அளவில் தேனைச் சேர்த்து ஒரு பாட்டிலில் அடைத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

   நாள்தோறும் காலை உணவிற்கு முன் ஒரு ஸ்பூன் எடுத்துக் கொண்டால் இதய அடைப்புக்கான அறுவை சிகிச்சையில் இருந்து விடுபடலாம். இதய அடைப்புக்கான ஒரு அற்புதமான மருந்து இது.

6. இதய வால்வு அடைப்பிற்கு இஞ்சி ஒரு நல்ல மருந்து. இஞ்சி சாற்றினை தினமும் அருந்தினால் இதய வால்வு அடைப்பு நீங்கும். இஞ்சி சாருடன், தேன் எலுமிச்சை சாறு, பூண்டு கலந்து குடித்தால் சுவையாக இருக்கும். ஆரோக்கியமாகவும் இருக்கும்.

ஏதாவது ஒன்றைக் கடைபிடியுங்கள்! தொடர்ந்து கடைபிடித்து பயன்பெறுங்கள்!!

★★★★★



நல்வாழ்வு : 23

## தோப்புக் கரணம் போடுவோம்

இந்த எளிய உடற்பயிற்சியால் நம் மூளையில் செல்களும், நியூட்ரான்களும் சக்தி பெறுகின்றன. நம் காதுகளை பிடித்துக் கொள்வது மிக முக்கியமான புள்ளிகளைத் தூண்டி விடுகின்றன. அதனால் மூளையின் நரம்பு மண்டல வழிகளில் சக்திவாய்ந்த மாற்றங்கள் ஏற்படுகின்றன. இடதுகையால் வலது காதையும், வலதுகையால் இடது காதையும் பிடித்துக் கொண்டு, உட்கார்ந்து எழுகையில் மூளையின் இரு பகுதிகளும் பலனடைகின்றன.

மூளையின் வலது இடது பாகங்கள் சமமான சக்திகளை பெறுகின்றன. மிக நுண்ணிய தகவல் அனுப்பும் பாகங்கள் சமமான சக்திகளை அடைகின்றன.

பரீட்சையில் குறைவாக மதிப்பெண் எடுக்கும் மாணவர் தோப்புக் கரணம் பயிற்சியை தொடர்ந்து செய்தபின் மிக நல்ல மதிப்பெண்கள் பெற்றான்.

தோப்புக்கரணம் போடுவது மூளையின் பணிகளை சிறப்படைய உதவும் யோக வாழ்வியலாகும். தினமும் தோப்புக்கரணம் போட்டால் நன்மைகள் பல உண்டாகும்.

★★★★★

நல்வாழ்வு : 24

## மாரடைப்புக்கு முதல் உதவி

திடீரென ஒருவருக்கு மாரடைப்பு ஏற்பட்டால் அவர் தண்ணீர் போன்று ஏதும் குடிக்க முயற்சி செய்யக் கூடாது. **ஒரு ஸ்பூன் சீரகம், ஒரு ஸ்பூன் உப்பு இரண்டையும்** வாயிலிட்டு மென்று துளித் துளியாக உமிழ்நீரை விழுங்க வேண்டும். சீரகம் + உப்பு = எலக்ட்ரோலைட் அளவுகளை உடனடியாக சரிசெய்து ஆபத்தைக் குறைக்கும். பிறகு மருத்துவரிடம் சென்று சிகிச்சையை தொடரலாம்.

★★★★★

**நல்வாழ்வு : 25**

## உப்பின் தேவை எவ்வளவு?

ஒரு நாளைக்கு உடலுக்கு 6 கிராம் உப்பு (சோடியம்) தேவைப்படும். இது கிட்டத்தட்ட ஒரு டீஸ்பூன் அளவு மட்டுமே. நம் உடலுக்கு சோடியம் உப்பை விட பொட்டாசியம் உப்பின் தேவை அதிகம். பொட்டாசியம், உப்பு, பழங்கள், பால், கீரை உணவு, பச்சைக் காய்கறிகள், பருப்பு மற்றும் உலர் பழங்களில் நிறைந்திருக்கிறது. சோடியம் உப்பை குறைத்து பொட்டாசியம் நிறைந்த பழங்கள், காய்கள் உண்பது நலம்.

★★★★★

நல்வாழ்வு : 26

# சம்மணம் போட்டு அமர்வதால் உண்டாகும் நல்வாழ்வு

நம் முன்னோர்கள் கூறிய நல்வாழ்வு முறைகளில் இதுவும் ஒன்று. நாம் காலை மடக்கி சம்மணம் போட்டு உட்கார்ந்திருக்கும் பொழுது, இடுப்பு பகுதியில் இருந்து மேலே அதிகமாக இரத்த ஓட்டம் செல்கிறது. இதனால் உடலின் மிக முக்கிய உறுப்புகளாகிய சிறுநீரகம், கணையம், நுரையீரல், மூளை, கண், காது ஆகியவை இடுப்பின் மேல் பகுதியில் இருப்பதால் இந்த பகுதிக்கு இரத்தம் சென்று நமக்கு சக்தியும் ஆரோக்கியத்தையும் அதிகரிக்கச் செய்கிறது. சம்மணம் போட்டு அமர்வது வயிற்றுக்கு நல்லது.

இடுப்புக்கு கீழே உள்ள பகுதிக்கு இரத்த ஓட்டம் குறைந்து காணப்படும். ஏனென்றால் இடுப்புக்கு கீழ்பகுதிக்கு இரத்த ஓட்டம் அதிகம் செல்லாமல் முழு சக்தியையும் வயிற்றுப் பகுதிக்குச் சென்று நம்முடைய உறுப்புகள் இயங்கு திறனை அதிகரிப்பது மட்டுமல்லாமல் ஜீரணத்தையும் நன்றாக நடைபெற உதவுகிறது.

இடுப்பு எலும்பு தேய்மானம் (spondylosis) முன்பின் இடம் பெயர்வு (listhesis) சவ்வு தட்டுகள் இறுகி வெளியே நீட்டுதல் (prolose) உள்ளவர்கள் கீழே உட்காரக்கூடாது. உட்கார விரும்பினால் மருத்துவரின் ஆலோசனை தேவை.

**வஞ்சராசனம் :**

உணவு அருந்தியவுடன் செய்யக்கூடிய ஒரே ஆசனம் இது. தரையில் முழங்கால் போட்டு அமர்வது இடுப்பு எலும்புகளுக்கு நல்லது. வஞ்சாரனத்தில் அமரும்போது கால்களில் வலி ஏற்பட்டால் கால்களுக்கு கீழே ஒரு சிறிய தலையணை வைத்துக் கொள்ளலாம். இந்த ஆசனத்தை செய்வதால் ஜீரண சக்தி அதிகரிக்கும்.







நல்வாழ்வு : 27

## உடம்பில் உள்ள சளி உடனே வெளியேற

பொதுவாக சிலருக்கு குளிர் காலங்களில் சளி பிடித்து எந்த மருந்துகளை உபயோகித்தாலும் குணமாகாது.

மூன்று எலுமிச்சை பழத்தை எடுத்து, அதை பாதியாக வெட்டி, ஒரு பாத்திரத்தில் போட்டு, அதில் இரண்டு கப் அளவு தண்ணீர் ஊற்றி. அதனில் தேவையான அளவு உப்பு இட்டு நன்கு கொதிக்க வையுங்கள். கொதிக்க வைத்த இரண்டு கப் நீர், ஒரு கப் அளவு குறையும் வரை கொதிக்க விடுங்கள். பிறகு கொதிக்க வைத்த எலுமிச்சை பழத்தையும் இரண்டு கப்பிலிருந்து ஒரு கப்பாக குறைந்த கொதிநீரில் பிழிந்து அந்த நீரை ஒரு கப்பில் எடுத்து சிறிதளவு நாட்டுச் சர்க்கரை சேர்த்துக் கொள்ளுங்கள். ஓரளவு சூட்டுடன் இரவு தூங்கச் செல்லும் அரை மணி நேரத்திற்கு முன்பு குடித்துவிட்டு தூங்குங்கள்.

நீங்கள் உறங்கிய பிறகு உங்களுக்கு வியர்வையாக வியர்த்து உங்கள் உடம்பில் உள்ள சளி வெளியேறி விடும். பிறகு மருத்துவரிடம் செல்ல வேண்டிய அவசியம் இருக்காது.

குளிர்ந்த நீரில் குளித்துப் பழகினால் சளி தங்காது. தங்கி நிற்காது.



நல்வாழ்வு-28

## பிறந்த குழந்தைக்கு மொட்டை

குழந்தை தாயின் கருவறையில் இருக்கும் பொழுது கருவறையில் இரத்தம், சிறுநீர், மலம் போன்ற தண்ணீர் நிறைந்த சூழலில் இருந்திருக்க நேரிடுகிறது. அதில் உள்ள கழிவுகள் தலையில் தேங்கியிருக்கும். அதனை வெளியேற்ற மொட்டை அடித்தால் மட்டுமே அந்த வேரின் வழியாக தேங்கியிருக்கும் கழிவுகள் வெளிவரும். இதுதான் மொட்டை அடிப்பதற்கு அடிப்படைக் காரணம்.

மொட்டை அடித்து காது குத்துவதால் மூளையிலுள்ள கோடிக் கணக்கான நியூட்ரான்கள் புத்துணர்வு பெறுகின்றன. எதிர்காலத்தில் நல்ல கல்வி ஞானம் பெற அது மிக உதவியாய் இருக்கும்.

★★★★★

நல்வாழ்வு : 29

## மௌன விரதம்

கணவர் நல்லா இருக்க வேண்டும் என்று திருவாதிரை விரதமும். தாலி நிலைத்திருக்க வேண்டும் என்று சுமங்கலி விரதமும் கடைப்பிடிக்கும் குடும்பப் பெண்களே! நீங்கள் வாரம் ஒரு நாளாவது மௌன விரதம் இருந்தீர்கள் என்றால் உங்கள் கணவர் சந்தோஷப்படுவார். உங்கள் உடல், மனம் இரண்டின் ஆரோக்கியமும் மேம்படும்.

★★★★★

## குலதெய்வ வழிபாடு

ஸ்ரீவிளம்பி வருடம் மாசி மாதம் 3-ஆம் நாள் வெள்ளிக்கிழமை 15.02.19 அன்று அரளிப்பாறை அருகில் உள்ள ஸ்ரீ செட்டிகருப்பர் ஆலயத்தில் மாசி மாதப் படையல் உளுந்தூருடையார் வீட்டு பங்காளிகளால் காலை 7-00 மணி முதல் மாலை 6-00 மணி வரை பொங்கல், முருகனுக்கு அபிஷேகம், மதியம் அன்னதானம், சாமியாட்டம், மாவிளக்கு பூஜை என பல்வேறு ஆன்மிக நிகழ்ச்சிகள் இனிதே நடைபெற்றது. இதில் பங்காளிகள், மாமன், மைத்துனர், ஊர் பொதுமக்கள் போன்றோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

**தகவல்: S. ராஜா B.Com., அன்னூர்.**

★★★★★

# கழக அறிவிப்புகள் - மே 2019

1. **கல்விக் கடனை திருப்பிச் செலுத்துதல் :**

கல்விக் கடன் பெற்றவர்கள், தங்களுடைய படிப்பு முடித்து வேலைக்குச் சென்றதும் தங்கள் முதல் செலவாக நினைத்து கல்விக் கடனை AVN கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு இந்தியன் வங்கி கணக்கு எண் 493740102, புதுப்பட்டி கிளை IFSC-IDIB000P052, திருப்பிச் செலுத்திட வேண்டுகின்றோம். வங்கிகணக்கில் பணம் கட்டிய விவரத்தை உடனடியாக 9444468900 என்ற எண்ணிற்கு தெரியப்படுத்த வேண்டுகின்றோம்.

**2. பண்பாட்டு பயிற்சி முகாம் 2019**

மே மாதம் நடைபெறும் மாணவ மாணவியர் பண்பாட்டுப் பயிற்சி முகாமில் கலந்து கொள்ள தங்கள் குழந்தைகளை தவறாது அனுப்பி குழந்தைகளுக்கு கல்வியுடன் நல்ல ஒழுக்கத்தினையும், மன உறுதியினையும் கற்றுக் கொள்ள உதவும் இந்த அரிய வாய்ப்பை நகரத்தார்ப் பெருமக்கள் பயன்படுத்திக் கொள்ளுமாறு வேண்டி கேட்டுக் கொள்கின்றோம். பயிற்சி முகாமில் கலந்து கொள்ள ஆகும் செலவுகளை கல்வி வளர்ச்சிக் கழகமே ஏற்கும் என்று மார்ச் 2019 இதழில் வெளியிட்டுள்ளோம். (முழு விவரத்திற்கு பக்கம் 58 / மார்ச் 2019 இதழ்)

3. **சுழலும் நூலகத்திட்டம் :**

கல்வி வளர்ச்சி கழகத்தில் மாணவர்களுக்கே மாணவர்களே உதவி செய்து கொள்வது என்ற எண்ணத்தில் சுழலும் நூலகத்திட்டம் என்ற திட்ட விவரத்தை ஜுலை 2018 இதழ் பக்கம் 6-இல் விரிவாக எழுதியிருந்தேன். அதற்கான நேரம் இப்போது நெருங்கி வருகின்றது. ஆமாம். இந்தக் கல்வியாண்டு முடியும் தருவாயில் இருப்பதால் தாங்கள் படித்து முடித்த நூல்களை அடுத்து வரும் மாணவர்களுக்குப் படிக்க உதவும் வகையில் கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு அனுப்பித் தாருங்கள். மேலும் விவரங்களுக்கு செயலாளர் சுப. செல்வம் அவர்களை 94444 68900 என்கிற எண்ணில் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

**– சுப. செல்வம், செயலாளர்**

★★★★★

**அச்சிட்டோர் :** திரு. சொ. முருகேசன்
சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ்
534 -ஏ, காமராஜர் சாலை, சிவகாசி - 626123.
போன்:04562-223315 இ.மெயில் suryaprint1998@gmail.com




★★★★★



சத்தியமங்கலம், **சொ. சுப்பையா செட்டியார் - ஜெயலட்சுமி ஆச்சி** மற்றும் **திருச்சி.இராம.மணிவாசகம் செட்டியார் - சௌந்தரம் ஆச்சி** ஆகியோரின் பேத்தியும், **கோவை, சுப. சொக்கலிங்கம் - காமாட்சி** ஆகியோரின் மகளுமாகிய செல்வி.**சொ.அபிராமி** அவர்கள்

★ **2015, ஆகஸ்ட்** – ல் நடைபெற்ற **ஹிந்தி** மொழித் தேர்வில் **B.A.,** ப்ரவீன் உத்தராத் பட்டம் பெற்றுள்ளார்.

★ **2017, பிப்ரவரி** – ல் சான்றிதழுடன் கூடிய **ஆங்கில தட்டச்சில் சீனியர்** பிரிவில் பட்டம் பெற்றுள்ளார்.

★ **2017, செப்டெம்பர்** – ல் சான்றிதழுடன் கூடிய **3 ஆண்டு டிப்ளமோ** பயின்று **பரதநாட்டிய** பட்டம் பெற்றுள்ளார்.







Bharatiya Vidya Bhavan
FACULTY OF FINE ARTS
(Evening Classes)
Diploma Certificate
This is to certify that Selvi C.Abirami has successfully completed the Three year Diploma Course in Bharatanatyam and was placed in First class in the examination held in September 2017
05.09.2017

தகவல் : **திரு. இராமநாதமோகன்,** திருச்சி



## ஸ்ரீ மங்கைபாகர் தேனம்மை திருமண தகவல் மையம் கோவை.

**இலவச சேவை கட்டணம் ஒன்றும் இல்லை.**

நமது சமூகப் பெருமக்களே! பெற்றோர்களே!

மணமகன் - மணமகள் தேவைக்கு உரிய விவரத்துடன் தபால் அனுப்புங்கள், வரிசைப்படி நம்பர் பதிவு செய்து அதற்குறிய பதிவேட்டில் விவரம் எழுதி விரைவில் திருமணம் கைகூட வழி காண்பிக்கிறோம்.

18.07.2006ல் துவங்கியது இச்சேவை பதிவு ஆனது 374. இணைந்த தம்பதிகள் 271. பெண் பிள்ளைகள் பதிவு மிக மிக குறைவு. பெண் பெற்றவர்கள் பதிவு செய்ய முன் வரவும். வசதி படிப்பு குறைவு இருப்பினும் மறுமணம் வேண்டி இருப்பினும் தகவல் கொடுத்தால் மிகக் கவனமாகப் பேசி தகவல் தந்து இல்லற இணைப்புக்கு வழி காட்டுகிறோம். இச்சேவையை நம்மவர்கள் பயன்படுத்தி ஒத்துழைப்பை தர வேண்டுகிறோம்.

தொடர்பு நேரம் : 9.00 மணிமுதல் 3.00 மணி வரை மாலை 7.00 மணி முதல் 9.00 மணி வரை

சாமியாடி எஸ். ஜெகநாதன்
நெ. 10இ அம்மன் கோவில் தோட்டம்,
பஸ்நிலையம், வடவள்ளி,
கோயமுத்தூர் - 641 041
செல் : 98948 37649

பி.எல்.ஆர். திருமுருகன் ஸ்டோர்ஸ்,
நெ.18, எம்.கே.ஜி. லே - அவுட்
(ஐ.டி.ஐ. பின்புறம்) ஜி.என்.மில்
கோயமுத்தூர் - 641029
செல் : 99523 49855

குறிப்பு : சேவையில் பதிவு கொடுத்தவர்கள், திருமணமான பின் திருமண தேதியை தெரிவிக்க வேண்டுகிறோம்.

**குரல் எண் : 140**

# வாசகர் குரல்

நம்மவரில் அடுத்த டாக்டர் M.R.M. அண்ணாமலை அவர்களை வாழ்த்துகிறேன். நல்வாழ்வு கட்டுரைகள் மிகவும் பயன்தரும் பகுதிகள். வாழ்த்துகிறேன்! கொன்றைவேந்தன் மிக அவசியமான பகுதி. குரல் ஆசிரியருக்கு எனது வாழ்த்துக்கள்!

**– டாக்டர் S. தியாகராஜன் BNYS, திருச்சி, செல் : 98 65 93 27 50**

★★★★★

அருமை! புதுமை! பெருமை! Whats App குரல் இதழ் வெளியீடு. பாராட்டுக்கள்!! வாழ்த்துக்கள்!!!

**– திரு. சேதுராமன், மணப்பாறை செல்: 81 22 38 00 75**

★★★★★

மார்ச் ‘19 வெளியீடு குரலை வெப்சைட்டில் வாசித்தேன். தலைவரும், செயலாளரும் தஞ்சாவூர் சென்ற பயணம் மாபெரும் வெற்றி! கழக வளர்ச்சி தொடங்கிவிட்டது குறித்து மிக மிக மகிழ்ச்சி! தலைவருக்கும், செயலாளருக்கும் மனமார்ந்த பாராட்டுக்கள்! வாழ்த்துக்கள்!! தொடரட்டும் வளர்ச்சியும்! சேவையும்!

**– திரு. நா. திருநாவுக்கரசு, பொன்னமராவதி செல்: 75 30 04 21 75**

★★★★★

மணமக்கள் அட்டைப்படம், காசி ஆன்மிகப் பயணம் அருமை. காசியில் நமக்கோர் இடம் உள்ளது. காசி விஷ்வநாதர் அருளால் மிக அருகில் உள்ள காலங்களில் அமையும். சென்னை நகர குடும்ப விழா இல்லையென்று சொல்ல ஐஸ்கிரீம், முழு வெண்ணிலா விழாவாக குளிர்ந்தது. சென்னைவாழ் நம்மவர்களுக்கு வாழ்த்துக்கள். நல்வாழ்வு கட்டுரைகள் அனைத்தும் நம் எல்லோருக்கும் ஆரோக்கிய வாழ்வு கட்டுரையாக அமைந்திருந்தது. சொ.வை அவர்களின் முதியோர் நல்வாழ்வு கட்டுரை அருமை. முதியோர் இல்லம் அமைக்கும் காலம் விரைவில் வரும். சுப. துரைராசு அவர்களின் கட்டுரை சிறந்த வழிகாட்டி.. முக்தி பாதைக்கு இதுதான் முதுமை கவிதை நாம் ஒவ்வொருவருக்கும் உண்மையை வெளிக்காட்டியது. நன்றி.

**– அரு. சோம சண்முகநாதன், உலகம்பட்டி. 99657 68000**

★★★★★

**வாசகர் குரல் :**

## காசி, கயா, அலஹாபாத், ராமேஸ்வரம் புனித யாத்திரை அனுபவங்கள்

காசி புனித யாத்திரை சென்றுவந்த நமது குரல் வாசகர்களின் கருத்துக்கள் :

**திருமதி. மரகதம் ஆச்சி, பிரான்மலை :** வீட்டு கவலைகளை மறந்து இறைவன் அருள் பெற்று சிறப்புடன் வந்தோம்.

**திருமதி. ராஜாமணி ஆச்சி, திருமதி. சுலோச்சனா ஆச்சி, திருமதி. அனுசியா ஆச்சி, புழுதிபட்டி :** நமது நகரத்தார்கள் ஒன்று சேர்ந்து ஒற்றுமையாக புனித யாத்திரை சென்று வந்தது மிக சிறப்பாகவும், சந்தோசமாகவும் இருந்தது.

**திருமதி. தேவி அம்மாள், சிறுகுடி :** இன்னும் ஒரு முறை கூட பார்க்க சென்றுவர ஆசையாக உள்ளது.

**திருமதி. சரோஜா ஆச்சி, பொன்னமராவதி :** எனது வாழ்க்கையில் மறக்க முடியாத ஒரு அனுபவம்.

**திருமதி. சுசீலா ஆச்சி, பொன்னமராவதி :** பெண்கள் திதி கொடுக்கின்ற ஒரே இடம் கயா சென்று கலந்து கொண்டது மிகவும் புண்ணியம்.

**திரு. முருகேசன், சொக்கம்பட்டி :** 12 ஆண்டுக்கு ஒரு முறை நடைபெறும் அலகாபாத் கும்பமேளாவில் நமது நகரத்தார்கள் உடன் கலந்து கொண்டது மிகவும் மகிழ்ச்சி.

**திரு. சந்திரசேகரன், திருமதி. திரவியம் ஆச்சி, சிங்கம்புணரி :** லாட்டரி டிக்கெட்டில் பல கோடி விழுந்து இருந்தாலும் கிடைக்கும் மகிழ்ச்சி சந்தோஷத்தை விட பல மடங்கு மகிழ்ச்சி எங்களுக்கு கிடைத்த காசி புனித யாத்திரை.

**திருமதி. ராசாத்தி ஆச்சி, திருமதி. சாந்தா ஆச்சி, திண்டுக்கல் :** வட இந்தியப் பயணம் முதல் முறை என்பதால் அனைத்து இடங்களும், நிகழ்ச்சிகளும், காட்சிகளும் நீங்கா நினைவாக மனதில் நின்றது.

★★★★★



## வாசகர் குரல் :

சைவ சமயத்தைப் பின்பற்றி வாழும் நம் சமுதாய மக்கள் வாழ்வில் ஒரு முறையேனும் புண்ணியதலமாம் காசிக்குச் சென்று, கங்கையில் நீராடி, காசி விஸ்வநாதர், விசாலாட்சி, அன்னபூரணி மற்றும் தெய்வங்களை வழிபட்டு வந்தால் நற்கதி கிட்டும் என நம்பிக்கையுண்டு.

நம்மவர் திரு. சுப. ராஜகோபால் – திருமதி. ரேணுகா ஆச்சி குடும்பத்தினர் வழிநடத்துதலில், நம் இன மக்களை காசி, கயா மற்றும் பல இடங்களுக்கு அழைத்துச் சென்று வந்துள்ளார்கள். அவர்களுக்கு ஸ்ரீ மங்கைநாயகர் அருளாசியுடன் பாராட்டுக்களும் உரித்தாகுக.

கல்வி வளர்ச்சிக் கழக முன்னாள் தலைவர் திரு. சொ. வைத்திலிங்கம் அவர்கள் வழங்கிய முதியோர் நல்வாழ்வு கட்டுரை முதியோர் மற்றும் அனைத்து வயதினரும் கடைப்பிடித்து வந்தால், அனைவரும் நோயின்றி, மருத்துவச் செலவில்லாமல் வாழலாம்.

**– ம. கதிரேசன், கோவை.**

★★★★★

## ZEE TV தமிழா! தமிழா!! நிகழ்ச்சியில் நம்மவர்



மார்ச் 31, 2019 அன்று ZEE TV தமிழா! தமிழா!! விவாத நிகழ்ச்சியில் Mr. Perfect கணவர் மற்றும் அவரது மனைவி என்னும் தலைப்பில், அம்மன்குறிச்சி / சென்னை திரு. து. அரவிந்த்குமார் – பத்மா தம்பதிகள் கலந்து கொண்டு, சிறப்பாக உரையாடி 'Mr. Perfect Mrs.Sharp"என்னும் பட்டம் அளித்து பாராட்டுதலுடன், சிறப்பு பரிசாக ஜெயகாந்தனின் "ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்" புத்தகம் வழங்கப்பட்டது. இவர்களை நாம் அனைவரும் பாராட்டுவோம்.

நிகழ்ச்சியைப் பார்க்க http://www.zee5.com/tv shows/details/tamizha-tamizha 0-6-1109

தகவல் : திருமதி. து. மீனாட்சி துரைராஜ்

★★★★★

# நான்காம் ஆண்டு நினைவு அஞ்சலி

**எங்களை வாழவைக்கும் தெய்வம்**





தோற்றம் :
**23-09-1934**

மறைவு :
**08-05-2015**

தெய்வத்திரு. **மு. தேனம்மாள் ஆச்சி**

**V. புதூர்.**

**(க/பெ. மு. மயி. முத்துச்சாமி செட்டியார்**
**என்ற சேது செட்டியார் )**

**இம்மண்ணுலகை விட்டு மறைந்தாலும்**
**உங்கள் ஆசியுடன்**
***நினைவில் வாழும்***

**கணவர் : மு. மயி. முத்துச்சாமி செட்டியார்**
***மற்றும்* மகன்கள், மகள்கள், பேரன், பேத்திகள்**

**V. புதூர்.**

அட்டைப்பட விளக்கம்

## முதலாம் ஆண்டு நினைவஞ்சலி



அன்புள்ள அம்மாவிற்கு,
அன்னை இல்லம் அனாதை ஆனது!
அப்பாவின் மனது கவலை ஆனது!
உன் அறையில் தேடி அலையும்
பேரனும் பேத்தியும் வழி கண்டு
விழிபிதுங்கி நிற்கிறார்கள்!!
அரபிக் கடல் போன்ற அன்பும்
பசிபிக் கடல் போன்ற பண்பும்
இந்தியப் பெருங்கடல் போன்ற இரக்கமும்
உள்ள உனக்கு உன் மடியில்
துயில் கொள்ள முடியவில்லையே எனக்கு!

நீ கனவில் வருவாய் என நித்தம் உறங்குகிறேன்! நாட்கள் பல எண்ணி நான் கழித்த நாட்கள், மாதம் பல கடந்து, வருடம் ஒன்றாயிற்றே! வேதனையும், சோதனையும் கடந்த அப்பாவின் வாழ்விலாவது வந்து உன் தெய்வ அருள் காண மனம் துடிக்கிறது. கடவுளுக்கு உன்மேல் உள்ள அன்பினால் பூலோகம் விட்டு விண்ணுலகம் சேர்த்தாரோ?

வாழ்வில் மீண்டும் அடுத்த பிறவியில் உன் வயிற்றின் கருவறையில் நான் உறங்க வேண்டும். அதற்காக நீ பூவுலகிற்கு இறங்கி வர வேண்டும்!

மானாட, மயிலாட நிகழ்ச்சி தொலைகாட்சியில் பார்த்தேன். நீங்கள் இறந்த அந்த வாரமே, மயில் வீட்டு மாடியில் இறங்கி வர நேரில் பார்த்தோம்! இதைக் கண்டு மெய்சிலிர்த்துப் போனோம் நாங்கள்!!

நீ இறக்கவில்லை! அம்மா நீ இறக்கவில்லை!!
நீ எங்களோடுதான் வாழ்ந்து கொண்டிருக்கிறாய்!!
ரஞ்சிதம் ஆச்சி எங்கே? என உன் நலம் விரும்பிகள்
கேட்கும் போது எங்களால் பதில் சொல்ல முடியவில்லை, அம்மா!

எவர் தர்மன் என அள்ளி கொடுக்கும் மனம் படைத்த
உன்னை எமதர்மன் தூதுவிட்டு சிறையிலடைத்தானோ!!
எதையும் கண்டு துணிவுடன் போராடும் நீ
எமனைக் கண்டு எப்படி தோல்வி கண்டாய்?

நீ கும்பிடாத தெய்வம் இல்லை! குறை ஏதும் வைத்ததில்லை!!
நீ மண்டியிடாத தெய்வமில்லை! மறைமுகமாக செய்ததில்லை!!
உன்னை குற்றவாளி கூண்டில் ஏற்றிவிட்டானோ?
இறைவா ஏன் இந்தச் சோதனை? இந்த வேதனை!

கணவரை கண்கண்ட தெய்வமாய் காத்த நீ
அவரை கண்கலங்க விட்டுச் சென்றது ஏன்?
பாசத்திற்கு பாசமாய், நேசத்திற்கு நேசமாய்
குடும்ப குத்து விளக்காய், குடும்ப மருத்துவராய்,

செய்த செயல்கள் பல! எல்லோருக்கும் மருத்துவ உதவியுடன்,
பணிவிடையும் செய்தாயே! நினைத்து மறுகுகிறோம்!
மறக்க முடியவில்லை!!
சிட்டுகுருவிபோல் பொருள் சேர்த்து, வளம் சேர்த்தாயே,

பெற்றெடுத்த பிள்ளைகளை நட்டாற்றில் விட்டு விட்டு சென்றாயே!
பெருங்குடியில் வாழ்ந்த உனக்கு சிறுகுடி தந்த பரிசு இதுவா?
இன்னல்கள் இல்லாமல் வாழ்ந்த உனக்கு
மின்னல் போல் வந்து மறைந்தாயே எதற்கு?

நீ மருந்து சொல்லும் விதத்தில் மருத்துவராய் வாழ்ந்தாய்!
உன் மருத்துவ பக்குவம் கண்டு வியந்தவர்கள் பலர்!
அருள் சொல்லும் விதத்தில் அம்மனாய் வாழ்ந்தாயே!
நினைவுகள் பலவுண்டு. நீ இல்லையே! ஆண்டுகள்

பல ஓடினாலும், உன் அருள் வாக்கு மாறாதே!
வாழ்க்கையின் துணிவு கண்ட நீ வருத்தத்திலும் துணிவு கண்டாயோ?
பழனியப்ப செட்டியார் வீதியிலே பாதை சுவடு! பள்ளம் மேடு தெரியவில்லை
பாதை காட்ட வருவாயா? இல்லை பரிவு காட்ட வருவாயா?

விவரங்கள் தெரியவில்லை! வீட்டிலே புலம்புகிறோம்!
உரிமையோடு கேட்கிறோம். உயிரோடு வா நீ பரிவோடு ஏற்போம்!
பாதியில் சென்றதால் பாதை தெரியாமல் தவிக்கின்றோம்!
இரக்கம் கொண்டு இருளை போக்கிட இறங்கி வா! நீ!

இறைவன் உன்னை பிரித்து இருக்கலாம்.ஆனால்
உன் நினைவுகளை எங்களை விட்டு பிரிக்கவே முடியாது!

மயிலாக வந்து காட்சியளித்தாயே வந்துவிடு அம்மா! வந்துவிடு.
இரு கதவுகளும் திறந்தே இருக்கும் உனக்காக! இறங்கிவா!

இல்லாவிட்டால் உன் அன்பிற்காக
ஏக்கத்தின் கதவுகள் எங்களுக்கு திறந்திருந்தாலும்
சொர்க்கத்தின் கதவுகள் உனக்காய் திறக்கட்டுமே!
என இறைவனை பிரார்த்தித்துக் கொள்கிறோம்.

அய்யாபட்டி தந்த அற்புதமே! சொக்கம்பட்டி வந்த சித்திரமே!
காரைக்குடி வாழ்ந்து கண் மறைந்தாயே!
உன் உடல் அடக்கம் செய்யும் அவ்வேளையில்
வானத்தின் இருபுறமும் சூரியனும், சந்திரனும்
வந்து காட்சியளித்த அதிசயம் தான் என்ன?
கண்டவர்கள் வியந்தனரே!

கனவிலும் நினைவாய் நீ வர வேண்டும்! உன்
கணவரின் நினைவிலும் நீ இருக்க வேண்டும்!
உன் ஆசி எங்களுக்கு வேண்டும்!
உரிமையோடு கேட்கிறோம்! உயிரோடு வா எங்களுக்கு!

**உன் பாத மலர் தொட்டு என்றும் உன் நினைவில் வாழும்**
**கணவர் :**

A. ஏகப்ப செட்டியார், சொக்கம்பட்டி (இருப்பு), காரைக்குடி

**மகன் – மருமகள் :**

A. ஏகப்பன் (எ) துளசி – கீதா
ஏ. முத்துபழனி (எ) மகேந்திரன் – இராஜலட்சுமி BBA.PGDCA.

**மகள் – மருமகன் :**

V. ஏகாம்பாள் – KT. வெங்கடாசலம், கல்பனா மெடிக்கல், கோவை.
S. செண்பகவள்ளி B.com. – P. சுரேஷ், காரைக்குடி

**பேரன் – பேத்திகள் :**

A. ஏகப்பன் D.M.E. A. ஏகாம்பாள், A. முத்துபழனி
M. ஏகாம்பாள் M. ஏகப்பன்
V. தியாகு M.Sc., V. நவீன்
S. தர்ஷனா S. பரணிதரன்

மற்றும் குடும்பத்தாரும், உறவினர்களும்.

# கல்விக் காவலர்கள்

1. ★ **மே 2004 :** முதல் கல்விக் காவலர், ஆமலூருடையார், **தெய்வத்திரு. வெ. ராம. சுப்பிரமணியன் செட்டியார் – அன்னபூரணி ஆச்சி** அவர்கள், அம்மன் குறிச்சி, சென்னை.
2. **ஜூலை 2004 :** மேலூருடையார், **திரு. தே.மா. பழனிச்சாமி செட்டியார் – திருமதி. சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
3. **செப்டம்பர் 2006 :** கழனிவாசலூருடையார் **திரு. நா. சுப்பிரமணியன்** BSc., CAIIB **திருமதி. தமிழ்ச்செல்வி** B.Lit., அவர்கள், கல்லம்பட்டி, சென்னை.
4. **மார்ச் 2007 : நாவலூருடையார், திரு. ச. கனகசபை** B.E., **மனோரஞ்சிதம்** அவர்கள், உலகம்பட்டி, திருச்சி.
5. **ஜூலை 2007 :** கழூகக்கூருடையார், **தெய்வத்திரு. இராம. வேலாயுதம் செட்டியார் – பார்வதி ஆச்சி** அவர்கள், படமிஞ்சி, சென்னை.
6. **நவம்பர் 2007 :** கழனிவாசலூருடையார், **தெய்வத்திரு. மு.சி.கி. நாராயணன் செட்டியார் – இராஜமாணிக்கம் ஆச்சி** அவர்கள், கல்லம்பட்டி.
7. **மே 2010 :** சிக்கலூருடையார், **தெய்வத்திரு. நல்லாசிரியர் மெ. இளங்கோ – சாவித்திரி** அவர்கள். வா.புதூர்.
8. **ஜூலை 2011 :** அரும்பாக்கிளையார். திரு. **M.M. தியாகராஜன் B.Sc., தெய்வத் திருமதி. ஜோதிமணி** அவர்கள் புழுதிப்பட்டி. மதுரை.
9. **ஜனவரி 2012 :** பொன்னமராவதி பூண்டிலூருடையார். தெய்வத்திரு. மா. தங்கராஜன் – அழகு மீனாள் அவர்கள், புழுதிபட்டி – பெங்களூரு.
10. **மார்ச் 2012 :** கழூகக்கூருடையார். **தெய்வத்திரு. மு.ஆ. இராமசாமி செட்டியார். தெய்வத்திருமதி. இராஜாமணி ஆச்சி,** சொக்கம்பட்டி.
11. **மே 2012 :** நாவலூருடையார், **திரு. ச. சொக்கலிங்கம் செட்டியார் – தெய்வத்திருமதி. தனபாக்கியம் ஆச்சி** அவர்கள் உலகம்பட்டி.
12. **ஜூலை 2012 :** கழனிவாசலூருடையார். **திரு. P.L. இராமஜெயம், பத்மாவதி** அவர்கள், பொன்னமராவதி.
13. **செப்படம்பர் 2012 :** கழூகக்கூருடையார். **தெய்வத்திரு. M.S.M. மாணிக்கம் செட்டியார் – சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
14. **நவம்பர் 2012 :** பணப்பாக்குழூருடையார். **தெய்வத்திரு. கு. சொக்கலிங்கம் செட்டியார் - சொ. தேனம்மாள் ஆச்சி,** செம்பூதி.
15. **மார்ச் 2013 -** அரும்பாக்கிளையார், **தெய்வத்திரு. இராம. கதிரேசன் செட்டியார். திருமதி.முத்துலெட்சுமி ஆச்சி,** புழுதிப்பட்டி.

16. மே 2013 : மேலூருடையார். **தெய்வத்திரு. தே.மா. நாராயணன் செட்டியார் – சண்முகவள்ளி ஆச்சி,** பொன்னமராவதி.
17. ஜூலை 2013 : பூதமங்கலமூருடையார். **திரு. ச. இராமலிங்கம் – இராஜமாணிக்கம்,** அயனாவரம். சென்னை.
18. நவம்பர் 2013 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. துரைராசு செட்டியார் – மீனாட்சி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை
19. ஜனவரி 2014 : நாவலூருடையார். **தெய்வத்திரு. அரு. வேலாயுதம் செட்டியார் – சம்பூர்ணம் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.
20. மார்ச் 2014 : பூதமங்கலமூருடையார். **திரு. R. பரமசிவம் B.E., தெய்வத்திருமதி. சிவகாம சுந்தரி,** பொன்னமராவதி, சென்னை.
21. ஜனவரி 2015 : பூதமங்கலமுருடையார். **திரு. அ.சொ. சண்முகம் செட்டியார் – ஜெயபாரதி ஆச்சி,** அம்மன்குறிச்சி, திருச்சி.
22. மார்ச் 2015 : அரும்பாக்கிளையார். **திரு. A.P. ஜெயபால் – புவனேஸ்வரி,** பொன்னமராவதி, ஈராடு.
23. ஏப்ரல் 2015 : கமூகக்கூருடையார், **தெய்வத்திரு. ம.வெ. நாராயணன் செட்டியார் – மீனாட்சி ஆச்சி** உலகம்பட்டி.
24. ஏப்ரல் 2015 : நாவலூருடையார். **திரு. சித. நடராஜன் செட்டியார், தெய்வத்திருமதி. இராஜம்மாள் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.
25. மே 2015 : நாவலூருடையார். **திரு. அரு.வே. மாணிக்கவேலு – சரஸ்வதி,** பொன்னமராவதி.
26. ஜூலை 2015 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. செல்வம்** B.Sc., ACA., - **ஆனந்தம் ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை.
27. ஜனவரி 2016 : அரும்பாக்கிளையார், தெய்வத்திரு. **மங்கைபாகன் செட்டியார் – சிகப்பி ஆச்சி,** புழுதிப்பட்டி.
28. மே 2016 : கமுகக்கூருடையார், **திரு. சி.சொ.மு. இராமையா செட்டியார் – தெய்வத்திருமதி. ஜெகநாதம் ஆச்சி,** கொன்னைப்பட்டி, தேனி.
29. செப்டம்பர் 2017 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. நேசமணி செட்டியார் – அருள்நிதி புவனேஸ்வரி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை.
30. ஜனவரி 2018 : பணப்பாக்கூருடையார் **தெய்வத்திரு. சுப. மணிவாசகம் செட்டியார் – தேன்மொழி ஆச்சி,** காரைக்குடி.
31. செப்டம்பர் 2018 : கமுகக்கூருடையார் **திரு. சோம. கதிரேசன் செட்டியார் – தவமணி ஆச்சி,** பொன்னமராவதி, தொட்டாம் பாளையம்.

★ குரலில் வெளியிட்டுள்ள மாதத்தை குறிப்பிட்டுள்ளோம்.

பதிப்பாசிரியர் பக்கம்



# நமது திருமணமுறை

சுப. துரைராசு, குரல் பதிப்பாசிரியர்

சென்ற மாத முகூர்த்த நாட்களில் நமது உறவினர்கள் சிலரது திருமணத்திற்குச் சென்று முதல் வரிசையில் அமர்ந்து திருமண நிகழ்வுகளைப் பார்த்தேன். குறிக்கப்பட்டுள்ள முகூர்த்த நேரத்தில் தாலி கட்ட வேண்டும் என்ற எண்ணத்தில் மணமக்கள் வீட்டார் பரபரப்பாக இருப்பதைக் காண முடிந்தது. மணமக்கள் வீட்டார் இருவருக்கும் திருமண முறைகள் வரிசைப்படி அடுத்தடுத்து என்ன நடக்க வேண்டும் என்ற பிரக்ஞை / புரிதல் இல்லை. மேடையில் உட்கார்ந்திருக்கும் வயதான பெரியவர்களில் அதிகாரத்தோடு பேசுபவர் குரலே எடுபடுகிறது. அதன்படிதான் நடக்கிறது. அது சரியா தப்பா என்று அவ்விடத்தில் யாரும் சொல்ல முடியாத நிலை.

மணமகனின் இடது கையில் காப்பு கட்டுவதா? வலது கையில் கட்டுவதா? இப்படி சில சந்தேகங்கள்.......... மேலும் திருமாங்கல்யத்தை, வந்திருக்கும் உறவினர்களது ஆசீர்வாதம் பெற கூட்டத்தினரிடையே யார் எடுத்துச் செல்ல வேண்டும்? மணமிடுதல் என்று ஒரு நிகழ்ச்சி... முதலில் யார் மணமிட வேண்டும்? யார் யாரை மணமிட அழைக்க வேண்டும் என்பது பற்றி தெளிவின்மை.

மணமேடையில் யார் யார் கட்டாயம் இருக்க வேண்டும்? அதிகபட்சம் எத்தனை பேர் இருக்க வேண்டும் என்ற வரையறை ஏதாவது உண்டா! ஏதும் இல்லாத நிலையில் மணமக்களுக்கு முன்னே ஆண்கள் கூட்டமும், பின்னர் பெண்கள் கூட்டமும்... எல்லோரும் நெருங்கிய உறவுமுறையாகத் தான் இருப்பார்கள்.

எல்லாவற்றிற்கும் மேலாக, தாலி கட்டிய உடனே-பெற்றோர்கள் மணமிடுவதற்கு முன்பாகவே-ஒரு அரசியல்வாதி-ஊர்ப்பெரியவர் ஒருவர் தனது மனைவியுடன் நுழைந்து-மணமக்களை வாழ்த்தி மொய் கவரை நீட்டிவிட்டு புறப்படுகிறார்.

நமது திருமணமுறையில்-இப்போது-தாலி கட்டியவுடன்-மணமக்களை உடனே எழுந்திருக்கச் சொல்லி-அவர்களை-கூட்டத்தினர் ஆசீர்வாதம் செய்ய-அழைத்துச் செல்வது?...

இவ்வாறு பல முறைகள் பல இடங்களில் அவரவர்கள் நினைக்கும் வண்ணம் திருமண சடங்குகள் மாறி மாறி நடத்தப்பட்டு வருகின்றன.

இந்தமுறை நீடித்தால்–மேற்கொண்டு முப்பது வருடங்களில்– தாலிகட்டுவது மட்டுமே திருமணம் என்ற நிலை வரலாம். அடுத்த தலைமுறையினர்க்கு அருவியூர் வடக்குவளவு நகரத்தார் திருமணமுறைகளே தெரியாமல் போகக் கூடிய அபாயம் உள்ளது.

இதைவிட, மங்கல வாழ்த்து படிப்பது யார்? இசைவு பொன்னோலை யார் எப்போது படிக்க வேண்டும் என்ற முறையெல்லாம் காற்றில் பறக்க விட தொடங்கி விட்டோம். அண்மையில் ஒரு திருமணத்தில் – கல்யாணத்திற்கு வந்த தொடக்கப் பள்ளி (Elementary School) ஆசிரியர் ஒருவர் படித்தார். எந்த முறையில் இவர் படிக்கிறார் எனக் கேட்டபோது பதில் விசித்திரமாக இருந்தது–அவரை படிக்கச் சொல்லி விட்டார்களாம். ஒவ்வொரு உறவுக்கும் கொடுக்க வேண்டிய மரியாதை கொடுக்கப்படுவதும் இல்லை. அதைப் பற்றி அடுத்த பார்ட்டி கவலைப்படுவதாகவும் தெரியவில்லை. ஒரு காலத்தில் உரிமைக்கு போராடிய உறவினர்கள் இருந்தனர். இப்போது உரிமைகள் எதுவென்று தெரியாது இருப்பதால், நடப்பது சரி என்ற மனநிலை வளர்ந்து வருகிறது. இது சமுதாயத்தின் வளர்ச்சியா? இல்லை தளர்ச்சியா?

இவ்வாறு போய்க்கொண்டிருக்கிறது நமது திருமண முறைகள்? இதனை நடப்பது நடக்கட்டும் என்று இதே நிலையில் கண்டும் காணாமல் விட்டுவிடுவது நல்லதா? அல்லது சரியான முறையினைச் சொல்ல வைத்து – முறையாக திருமணத்தை நடத்திட துணை புரிவதா?

நமது சமூகத்தில் இம்முறைகளை எவ்வாறு செம்மைப் படுத்தலாம்? என்பது பற்றி தங்கள் கருத்துக்களை, கட்டுரையாக எழுதி அனுப்பிவைக்க ஆர்வமுள்ள சமூகப் பெருமக்களை வேண்டுகிறேன்.

செம்மையான முறைகளை வரிசைப்படுத்தி காட்டுவோம். ஆர்வமுள்ளவர்கள் செயல்படுத்திப் பயன்படுத்திக் கொள்வார்கள்!

★★★★★



# சிவ பாதம் அணைந்தார்

வெள்ளி வெற்பின் மேல், மரகதக் கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப், பவள வெற்பு என, இடப்பாகம்
கொள்ளும் மாமலையாளுடன், கூட வீற்றிருக்கும்
வள்ளலார் தம் பாதம், வந்து அணைந்தார் – **தேவாரம்**

சிறுகுடி, தெய்வத்திரு. S. சீனி அலங்காரம் செட்டியார் மனைவியும், திரு. A. நாகராசன் செட்டியார், திரு. A. பாரதி செட்டியார், திரு. A. குமர குருபரன் செட்டியார் அவர்களின் தாயாருமாகிய **திருமதி. அமிர்தம் ஆச்சி** அவர்கள் 08.02.2019 அன்று இறைவனடி சேர்ந்தார்.

**தகவல் : திரு ச. சதாசிவம் அவர்கள், புதுக்கோட்டை**

---

பொன்னமராவதி தெய்வத்திரு. ஏகாம்பரம் செட்டியார் அவர்களின் சகோதரியும், ஆலவயல் தெய்வத்திரு. **R.** பழனிக்குமார் செட்டியார் என்ற ராசு செட்டியார் அவர்களின் மனைவியும், திரு. R. சோனா, திரு. R. சக்திவேல், திருமதி. பா. தமிழ்மணி ஆகியோரின் தாயாருமான **திருமதி. R. ராசாமணி ஆச்சி** (வயது 92) 31-03-2019 அன்று இறைவனடி சேர்ந்தார்.

**தகவல் : திரு R. சக்திவேல், சென்னை, செல் : 988418 7522**

---

தஞ்சாவூர் அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கத்தின் முன்னாள் தலைவர் உயர்திரு N. உடையப்பன் செட்டியார் அவர்களின் மனைவியும், திரு U. பிரபாகரன் செட்டியார் அவர்களின் தாயாருமாகிய **U. கோமதி ஆச்சி** அவர்கள் 28.03.2019 அன்று அதிகாலை இறைவனடி சேர்ந்தார். **தகவல் : திரு. தி. ராஜேந்திரன், தஞ்சாவூர்**

---

சிறுகுடி செ. பெரிய அலங்காரம் செட்டியாரின் மூத்த மகனும், நீடாமங்கலத்தில் இருக்கும் வள்ளல் திரு. A. முருகன் அவர்களின் தந்தையுமான **செ.பெ. அலங்காரம் செட்டியார்** அவர்கள் தமது 84-வது வயதில் 27.03.2019 புதன்கிழமை அன்று சிறுகுடியில் இறைவனடி சேர்ந்தார்கள். **தகவல் : திரு. A. முருகன், நீடாமங்கலம்**

---

V. புதூர், திரு. M.P. வேலாயுதம் செட்டியாரின் மனைவியும் அ.வ.ந. சங்கத் தலைவர் திரு V. கணேசன் மற்றும் கோவை V. நாகராஜன் இவர்களின் தாயருமான, **திருமதி V. தவமணி ஆச்சி** (வயது 90) அவர்கள் 16.04.19 செவ்வாய்க்கிழமை அன்று இறைவனடி சேர்ந்தார். இவருடைய கண்கள் பிறருக்கு ஒளி வழங்கும் பொருட்டு பொன்னமராவதி Lions Club மூலமாக தானமாக வழங்கப்பட்டது.

**தகவல் :** V. **கணேசன், புதூர்**

---

குளத்துப்பட்டி திரு. அல. சிவராமன் செட்டியார் அவர்களின் மனைவியும், திருமதி. இராஜேஸ்வரி, திரு. வைத்தியநாதன், திரு. சங்கர், திரு. பூமிநாதன், திருமதி. லதா ஆகியோரின் தாயாருமான **திருமதி. சிவ. மீனாட்சி ஆச்சி** (வயது 67) அவர்கள் 25.3.19 அன்று பின்இரவு 3.00 மணி அளவில் இறைவனடி சேர்ந்தார்கள்.

**தகவல் : ம. சொக்கலிங்கம், வா. புதூர். 9791026092**

---

# அரும்பாக்கிளையார் குடிப்பட்ட புள்ளி விவரக் கையேடு

–Address Book

புழுதிபட்டி, சிங்கம்புணரி, கிருங்காக்கோட்டை அரும்பாக்கிளையார் பங்காளிகள், புழுதிபட்டி அருள்மிகு முடிமலையாண்டி சுவாமி திருக்கோயில் குடமுழுக்கு விழா 02-12-2018 அன்று நடைபெற்றபோது தங்களது பங்காளிகளது புள்ளி விவரக் கையேட்டினை அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள். இவர்களது குடும்ப விவரங்கள், படிப்பு, வயது, தொழில், செல் நம்பர், விலாசம் போன்ற விவரங்களைத் தொகுத்துக் கொடுத்துள்ளார்கள். இந்த விவரங்கள் எல்லோருக்கும் பயன்படும்.

இந்தக் கையேட்டின்படி அரும்பாக்கிளையார் பங்காளிகள் புழுதிபட்டியில் 76 புள்ளிகள் சிங்கம்புணரியில் 19 புள்ளிகள் கிருங்காக்கோட்டையில் 11 புள்ளிகள் ஆக மொத்தம் 106 புள்ளிகள் உள்ளனர்.

இந்தக் கையேட்டில் அரும்பாக்கிளையார் குடிப்பட்டத்தில் பிறந்து திருமணமான பெண்மக்களது பெயர், மாப்பிள்ளை பெயர், ஊர் என தொகுத்துக் கொடுத்துள்ளனர். இந்த விவரங்களை விரிவாகப் படித்தபோது ஒன்று புரிந்தது....மதிப்பிற்குரிய அரும்பாக்கிளையார் பங்காளிகள்-மற்ற குடிப்பட்டத்திலிருந்து 106 பெண் பிள்ளைகளை மணமுடித்து வந்துள்ளனர். அதே சமயம் இவர்கள் மற்ற குடிப்பட்டத்தினருக்கு 121 பெண் பிள்ளைகளை மணம்முடித்து கொடுத்துள்ளனர். அதிக பெண்மக்களை மற்ற குடிப்பட்டத்தினருக்கு கொடுத்து நமது சமூக வளர்ச்சிக்கு உதவியுள்ள அரும்பாக்கிளையார் பங்காளிகளைப் பாராட்டி மகிழ்வோம்!

இத்துடன் வரதலூருடையார் பங்காளிகள் 13 புள்ளிகள் பெண்மக்கள் 11 பேர் என்ற விவரமும் கொடுக்கப்பட்டுள்ளது. ஆக அருள்மிகு முடிமலையாண்டி சுவாமியை குல தெய்வமாகக் கொண்ட இரண்டு குடிப்பட்டத்தினரின் புள்ளி விவரங்களை அடங்கிய புத்தகமாக அமைத்துள்ளனர். சிறப்பான முயற்சி!

**மதிப்புரை : சுப துரைராசு, அரும்பாக்கிளையார் மாப்பிள்ளை.**





எங்கள் இதயதெய்வத்தின்

முதலாம் ஆண்டு

# நினைவஞ்சலி

06.05.2019



தெய்வத்திரு. **அ.ப.அங்கம்மாள் ஆச்சி**

*நீங்காத நினைவுகளுடன்*



1936

**ஆதிகாலத்து**
**அலங்கார மாளிகை**

பொன்னமராவதி | புதுக்கோட்டை



1936

**ஆனந்த்**
**பைப்ஸ்**

ஈரோடு | திருச்சி | மதுரை

## குடும்பத்தார்கள்

1 முதலாம் ஆண்டு

நினைவு அஞ்சலி

தோற்றம்
18.04.1991

மறைவு
14.06.2018



**தெய்வத்திருமதி V. சுகன்யா M.C.A.,**

அப்பா - அம்மா

**C. வைரவன் - V. பொன்னழகு**

தங்கை: **V. சரண்யா** - தஞ்சாவூர்

அக்கா - மாமா

**D. நல்லதம்பி - N. கிருஷ்ணப்ரியா**

**N. துரைக்கண்ணன் - N. ராமகிருஷ்ணன்**

**மற்றும் உறவினர்கள், நண்பர்கள்**

அ.வ.ந. முதல் கல்விக்காவலர்

**திரு. வெ.ராம. சுப்பிரமணியன் செட்டியார்- அன்னபூரணி ஆச்சி நினைவு**

## காசி, இராமேஸ்வரம் புனித யாத்திரை

சுப. இராஜகோபால் செட்டியார் - ரேணுகா ஆச்சி. போன்: 9445451450
















நல்வாழ்த்துக்களுடன்...



**Sona Ram**
Managing Director
**ASR Chartered Accountants**
*Auditors & Business Consultants*

**Sakthi Ram**
Managing Director
**ESAAR Business Solutions**
*Info-Tech & Mgt Consultants*




Office # M01, Al Tawhidi Building, Khalid Bin Waleed Road, Bank Street, Bur Dubai,
P.O. Box 34722, Dubai, United Arab Emirates
Tel: +9714-3529941 / 3512340 Fax: +9714-3522824 E-mail: esaar@eim.ae



CH International (UK)

***Serving businesses from offices in Dubai, Singapore, India and all over the World***




Management Consultants



MEDINEXT GENERAL TRADING L.L.C.




EMCR FACILITIES MANAGEMENT L.L.C




MEENATSHI



